ம்—காசியிற்சாவுற்றபொழுதும்-காசியிலிறந்தபோதும் — நாய்க்கெரிப்போருமைசாவுறி னும்-புலையர்வீட்டிலிறந்தாலும்—பதங்களுநும்-பரமபதத்தைப்பொருந்துவன். எ-று. (௬௩)

(அ-கை.) அகம்பாவமான பந்தநீங்கி யறிவாய்விளங்கினவனே யாவருமாராதிக்கத் தக்கவனெனல். (கவி) ஞானமடைந்தபொழுதிலிவ னல்விடுற்றோன்மனமிறந்தோ, னீனமானவகம்பாவப்பிராந்தியன்றோவிடர்பந்த, மானவீடாவதுமடமையந்தகா ரங்கெடலன்றோ, மானமிகுந்தவிவனெய்தின்மனிதர்பூசைசெயவேண்டும்...... *

(இ-ள்.) ஞானமடைந்தபொழுதில் - சைதன்யத்தைப்பெற்றமாத்திரத்தில்— இவனல் விடுற்றோன் - இவனல்லமோக்ஷத்தையடைந்தவன்—மனமிறந்தோன்-மனோநாசமானவன்— இடர்பந்தம் - துன்பமுள்ளபந்தமாவது—ஈனமான - இழிவாகிய— அகம்பாவப்பிராந்தியன் றோ - அகங்காரமயக்கமல்லவா—ஆனவீடாவது - ஆகியமோக்ஷமாவது—மடமையந்தகாரங் கெடலன்றோ - அஞ்ஞானாந்தகாரங்கெடுவதல்லவா (வென்றறிந்த) — மானமிகுந்தவிவனெய் தின் - மாட்சிமையிலுயர்ந்தவிவ் (வறிஞன்) வரின் — மனிதர்பூசைசெயவேண்டும் - புருஷரா ராதிக்கவேண்டும். எ-று....................................................................................... (௬௪)

(அ-கை.) அவன் முமுட்சுக்களாராதிக்கத்தக்கவனெனல். (கவி) போற்றவணங்கப் பூசிக்கப்புகழவருந்திப்போய்க்காண, மாற்றவுரியோனெவனவன்வன் பிறவியறுப் போர்க்கனவரதஞ், சாற்றுமகத்தாற்றீர்த்தத்தாற்றவத்தாற்றானத்தாற்கிட்டா, வூற்ற வறிவாற்பிறவியறுத்துயர்ந்தோன்பத்திதரும்பயனே.................................... *

(இ-ள்.) வன்பிறவியறுப்போர்க்கு-கொடியசநநங்களைக்கெடுப்பவர்களுக்கு— அவன் சீவன்முத்தனே—அனவரதம்-சதாகாலம்—போற்ற-துதிக்கவும்—வணங்க-வணங்கவும்— பூசிக்க - ஆராதிக்கவும்—புகழ - புகழவும் — வருந்திப்போய்க்காண - பிரார்த்தித்துப்போய்த் தரிசிக்கவும்—மாற்றவுரியோன் - மிகவுமுரியவன்—எவன் - யாவன் — ஊற்றவறிவால் - சலன மில்லாதஞானத்தினுல்—பிறவியறுத்துயர்ந்தோன் - பவத்தைநீக்கிமோக்ஷிமைப்பட்டவனோ— பத்தி - (அவனுக்குச்செய்யு) மன்பு—தரும்பயன் - கொடுக்கும்ப்ரயோசனமானது— சாற்று மகத்தால் - சொல்லப்பட்டயாகங்களினாலும்—தீர்த்தத்தால் - நதிகளினாலும்—தவத்தாற்றான் த்தாற்கிட்டா - தவங்களினாலுந்தானங்களினாலும்லெபியாது. எ-று. (இ-ரு-க-ம்) முத்திவிரு பபமுள்ளவர்களிச்சீவன்முத்தனைப் பூசித்து அதையடையவேண்டுமென்பதாம்......... (௬௫)

(அ-கை.) பிரமனுபதேசித்தெழுந்தருளுதல். (கவி) பரிந்திவ்வாறுகற்பித்துப்பக வன்மனுவாம்பேர்விரிஞ்சன், புரிந்துதனதுபொன்மனைபோய்ப் புக்கானிக்குவாகு வெனும், விரிந்தபுகழ்மன்னனுமந்தவிழியேபற்றிநிலைநின்றான்; வரிந்தகழற்காவி ராமவெனவசிட்டமுனிவனருள்செய்தான்................................................. *

(இ-ள்.) பரிந்திவ்வாறு - அன்புற்றிந்தவண்ணம்—கற்பித்துப்புரிந்து - போதித்து— பகவன் - பகவானென — மனுவாம்பேர்விரிஞ்சன் - மனுவென்னுநாமத்தையுடையபிரமாவா னவர்—தனதுபொன்மனை - தனதுகனக (மயமானசத்தியலோகத்திலுள்ள) வரண்மனையில்— போய்ப்புக்கான் - போய்ச்சேர்ந்தார்—கழல்வரிந்தகாவிராம - வீரகண்டாமணியைவரிந்திரு க்கின்றபாதத்தையுடையஸ்ரீராமா—இக்குவாகுவெனும் - இட்சுவாகுவென்கின்ற — விரிந்த புகழ்மன்னனும் - மிகுந்தகீர்த்தியையுடையவரசனும்—அந்தவிழியேபற்றி - அந்தத்திருஷ்டி யையேபிடித்து—நிலைநின்றானென-(தனதாத்ம) நிச்சயத்திலிருந்தானென்று—வசிட்டமுனி வனருள்செய்தான் - வசிஷ்டமுனியானவர்சொன்னார். எ - று. ( இ - ம் ) பிரமவுபதேசத்தா லிட்சுவாகுவுஞ்சீவன்முத்திப்பதத்தை யடைந்தனனென்பதாம்............................. (௬௬)

இட்சுவாகுகதை முற்றிற்று. ஆ-கதை ௬௰௩-கவிதை (௩௲௭௱௪௨)



# மானுவேடன்கதை.

(அ-கை.) முற்கதையிற் றனது விசாரத்தா லடையக்கூடாம லாசிரியர் முகவிசாரத்தா லகம் பாவ நீங்கிச் சர்வம்பிரமமயமென்னு மனுபவம் விளைந்ததை விளக்கி மேற்றுரியானுபவத்தைவிளங்கும் பொருட்டு மிருகவியாதன் கதையைநிரூபிக்கிறார்..... ........ ........ ........ *

(அ-கை.) அணிமாமுதலியசித்திகளில்லாத சீவன்முத்தருக்கற்புத மியாதெனவினவுதல். (கவி) (வேறு.) இந்தவாறிருக்கிற்சீவன்முத்தனாயினியதான,புந்திசேரிவனுக்கேதுபுதுமையா மதிசயந்தா, னந்தமில்பரத்தைக் கண்டோர்க் கதிகனேயென்று கேட்ட, சுந்தரவிராமற்கந்தத் தொன்மறைவசிட்டன்சொல்வான் .... ........ ...... *

(இ-ள்.) இந்தவாறிருக்கில் - இவ்வண்ணமிருந்தால்—சீவன்முத்தனாய்-சீவன்முத்தனாகி—இனியதான - இனிமையாயிருக்கின்ற—புந்திசேரிவனுக்கு- அறிவையுடையவிவனுக்குள்ள—புதுமையாமதிசயந்தான்- புதுமையானவியப்பானது—அந்தமில்-முடிவற்ற—பரத்தைக் கண்டோர்க்கு - பிரமத்தைதரிசித்தவர்களுக்கு — அதிகனே - அதிகனாகியவசிஷ்டமுனியே—ஏதுவென்றுகேட்ட - யாதென்றுகேட்ட—சுந்தரவிராமற்கு - அழகுள்ளவிராமனுக்கு—அந்தத்தொன்மறை வசிட்டன்சொல்வான் - அப்பழைமையான வேதத்தையுடைய வசிஷ்டமுனி சொல்லுவார். எ-று...... ...... ...... ...... ...... ...... ...... ...... (க)

(அ-கை.) ஆத்மாநந்தத்திலதிசயிப்பவ னணிமாதிசித்திகளி லதிசயிக்கானெனல். (கவி) ஒப்பறுஞானிபுந்தி யொன்றிலேயதிசயிக்குந், தப்பறநிறைந்துசாந்தனாயவன்றன்பானிற்குஞ், செப்புமந்திரங்கணோன்பு தந்திரஞ்சிந்தையானோர், கைப்படு விண்போக்காதி கருமத்திற்புதுமையென்னே...... ...... ...... ...... ...... *

(இ-ள்.) ஒப்பறுஞானிபுந்தி - சமானமில்லாதஞானவானுடைய புத்தியானது — ஒன்றில்- ஒன்றான(வாத்மாவி)னிடத்தில் — அதிசயிக்கும் - வியப்பையடையும் — தப்பறநிறைந்து-குற்றமில்லாமற்பூரணமாய்—சாந்தனாய்- உபசாந்தமுடையவனாய்—அவன் - அச்சீவன்முத்தன்—தன்பானிற்கும்- ஆத்மாவினிடத்திருப்பான்—செப்புமந்திரங்கள்-சொல்லப்பட்டமந்திரங்களும்—நோன்பு-தவங்களும்—தந்திரம்-உபாயங்களும்—சிந்தையானோர்- சிந்தித்தவர்களுக்கு—கைப்படும்-கைவசமாகின்ற—விண்போக்காதி-ஆகாயகமனமுதலிய—கருமத்திற்புதுமையென்னே-கன்மத்திலதிசயமென்ன. எ-று. (இ-உ-க-ம்) சீவபாவநீங்கிச் சிவமாவதற்கேதுவல்லாதவாகாயகமனமுதலியவைபறவைத்தொழிலுக்கொப்பெனவதிசயிக்கானென்பதாம்.(உ)

(அ-கை,) சித்திமுத்தியினிலக்கணங்கூறல். (கவி) உலகாய்விரிந்தவிவராலு மொழுங்கால்விரிந்தவருத்தத்தாற், பலமாமணிமாதியும்பண்ணப் படுமாதலினாற்றனையறிந்தோர்க், கிலதாமிவர்க்கோர்விசேடமுளவிழிந்தமூடப்புந்திகள்போ,லலனாகுவனெங்கணுமாசை யறலாலிவனெஞ்சமலமதாம்...... ...... ...... ...... ...... *

(இ-ள்.) உலகாய்விரிந்த- சகமாகப்பரவிய—இவராலும் - இவர்களாலும் — ஒழுங்கால்விரிந்த - முறைமையாகவிரிந்த—வருத்தத்தால் - ப்ரயாசையினாலும்—பலமாம்-பயனாயிருக்கின்ற—அணிமாதியும் - அணிமாமுதலிய(வஷ்டசித்திகளும்)—பண்ணப்படும் - செய்யப்படும்—ஆதலினால் - ஆகையால்—தனையறிந்தோர்க்கில்லாதாம் — ஆத்மஞானிகளுக்கிச்சித்தியில்லையாம்—இவர்க்கு - இந்தஞானிகளுக்கு—ஓர்விசேடமுள- ஒருவிசேடமுண்டாயிருக்கின்றது—இழிந்தமூடப்புந்திகள்போல்- இழிவுள்ளமூடமதிகளைப்போல—அலனாகுவன் - அல்லாதவனாவன்—எங்கணும் - எவ்விடத்திலும்—ஆசையறலால்- இச்சையற்றதினால்—இவனெஞ்சு-இவனதுமனம்—அமலமதாம் - நின்மலமாகும். எ-று. (இ-ம்) மாயாசகிதத்தாலடையுமணிமாதிசித்திக்குமாயா ரகிதத்தாலடையுமுத்தி மிகவும்விசேடமா மென்பதாம்...... ...... ...... (ஙு)

(அ-கை.) சீவன்முத்தரிலக்கணங்கூறல். (கவி) குறிதீர்வடிவாய்ப்பிறப்பிறப்பிற் கொடுநீள்காலமயக்கறலாற், பிறியாவின்பத்தறிஞனுக்குப் பேசுங்குறியிவ் வளவன்றே, வெறிகூராசைசினமோகம்விதனமூலோபமாபத்து, சிறிதாநிபுணநானுமெனக்செப்பிவசிட்டன்மீண்டுரைப்பான்...... ...... ...... ...... ...... *

(இ-ள்.) குறைதீர்வடிவாய் - (வருணாச்சிரமக்) குறிகளில்லாதவுருவமாய்—பிறப்பிறப்பில் - சநநமரணத்தில்—நீள்காலங்கொடு - அநேககாலங்கொண்டிருந்த—மயக்கறலால் - பிரமையானதுநீங்குதலினால்—பிறியாவின்பத்தறிஞனுக்கு - பின்னமற்றசுகபோதனுக்கு — பே

கீழுறி - சொல்லப்பட்டவடையாளமானது—இவ்வளவன்றே - இம்மட்டல்லவா — வெறிகூ ராசை - வாசனையிருந்தவிச்சையும்—சினம் - கோபமும்—விநனம் - துக்கமும்—உலோபம் - உலோபமும்—ஆபத்து - ஆபத்துமாகியவிவைகள்—நிபுணநாளும் - நிபுணமாகும் ...... மோ றும் - சிநிதாபெனச்செப்பி - அற்பமாகத்தெரிந்தபோகும் ...... றுணைப்பாய் - சிதீடமுனிநிரும்பவுஞ்சொல்லுவார். எ-று. (இ-ம்) காமக்குரோதாதிசகல கன்மங்களுமிறந்திருப்பதே யடையாளமாமென்பதாம் .................................... (௪)

(அ-கை.) சிற்பிரகாசமாய்விளங்கிய சீவேஸ்வரர்களுக்குக்காரணமின்றெனல். (கவி) மறை யோரொருவன்றன்னுடையமகிமைகடந்துசூத்திரனாய், முறைதீர்வதுபோ ...... முமீசனீசன் சிருட்டிதொறு, நிறைநீடுயிர்களளவின்றி நிகழுமூலச் சித்தசைவார், றுறைதோறவைதான்றோன்றிடுமாற்றொடர்காரணமிங்கிலதாகும் ............... *

(இ-ள்.) மறையோனொருவன் - ஒருபிராமணன்— தன்னுடையமகிமைகடந்து - தனது பெருமையைவிட்டு—சூத்திரனாய்-சூத்திரனாகி—முறைதீர்வதுபோல்-மரபுநீங்குவதுபோல— ஈசன் - ஈசனானவன் — சீவனெனமுளைத்தான் - சீவனென்றுசொல்லும்படியுண்டாயினன்— சிருட்டிதொறும் - சிருஷ்டிதோறும்—நிறைநீடுயிர்கள் - நிறைந்திருக்கின்றதிணடபிராணிக ளானவை—அளவின்றிநிகழும் - மட்டில்லாமற்பிரகாசிக்கும் — மூலச்சித்தசைவால் - காரண மானசித்தின்சலனத்தினால்—துறைதோறு - வழிகடோறும்-அவைதான்றோன்றிடும் - அச்சீவ ன்களுண்டாகும்—தொடர்காரணம் - தொடராநின்றகாரணமானது—இங்கிலதாகும் - இவ் விடத்தில்லையாம். எ-று ................................................................ (௫)

(அ-கை.) சீவர்கள்பிறத்தற்றுக்காரணமுரைத்தல். (கவி) ஈசனிடைநின்றுற்பவமாயெழுந்த வுயிர்கடாஞ்செய்த, வீசுகருமங்களினுமேலேமேன்மேற்பிறவிகளைமேவுந், தேசமுடையாய் காரியகாரணத்தின்செய்தியிதுவாகு, மேசுபிறவிகருமமெனுமிரண்டினுக்குமிப்படியே.

(இ-ள்.) ஈசனிடைநின்று - ஈஸ்வரனிடத்திலிருந்து—உற்பவமாய் - உண்டாகி—எழுந்த வுயிர்கள் - வளர்ந்தசீவர்கள்—தாஞ்செய்த - தாங்கள்செய்த—வீசுகருமங்களினால் - வீசாநின் றகன்மங்களினால்—மேன்மேல் - மேலுமேலும்— பிறவிகளைமேவும் - சநநங்களைப்பொருந் தும்—தேசமுடையாய் - தேயத்தையுடையஸ்ரீராமா— காரியகாரணத்தின்செய்தி - காரியகா ரணத்தினொழுங்கு—இதுவாகும் - இதுவேயாகும்—ஏசு-பழிக்கத்தக்க—பிறவிகருமமெனும்- பவமுங்கருமமுமென்கின்ற—இரண்டினுக்குமிப்படியே - இரண்டுக்குமிந்தப்பிரகாரமே.எ-று. (இ-உ-க-ம்) சீவர்களுதித்தற்குக் காரணமின்றாயினுஞ் செனித்துமரித்தலுக்குக் கன்மசன்ம மே யொன்றுக்கொன்று காரணமாயிற்றென்பதாம் ............................................................ (௬)

(அ-கை.) அகாரணமாயுண்டான சீவர்களுக்குப் பின்வந்த காரணங்களைக்கூறுதல். (கவி) பரமமதனிற்காரணத்தாற்பரந்தவுயிரெல்லாமுண்டாம், விரவுமதற்பின்பவர்க் கெல்லாமிகத்தாஞ்செய்தகருமங்க, ளுரியசுகதுக்கங்கடமக்குறுகாரணமாந்தனைய றியாப், பிரமைதனிற்சேர்சங்கற்பம்பேசுங்கருமங்களின்மூலம் ................ *

(இ-ள்.) பரமமதனில் - பிரமபதத்திலிருந்து— அகாரணத்தால் - நிஷ்காரணமாய்— பரந்தவுயிரெல்லாமுண்டாம் - விரிந்தசீவர்களனைவருமுதிக்கும்—விரவுமதற்பின்பு - உண்டா னதன்பின்பு—அவர்க்கெல்லாம் - அவ்வுயிர்களனைவர்க்கும் — மிகத்தாஞ்செய்த - மிகவுந்தாங் கள்செய்த—கருமங்கள் - கன்மங்களானவை—உரியசுகதுக்கங்கடமக்கு - உரிமையானசுகதுக் கங்களுக்கு—உறுகாரணமாம் - பொருந்துகின்றகாரணமாகும்— தனையறியா - ஆத்மாவையறி யாத—பிரமைதனில் - மயக்கத்தில்—சேர்சங்கற்பம் - உண்டானசங்கற்பமானது—பேசுங்கரு மங்களின்மூலம் - சொல்லப்பட்டகன்மங்களினதுகாரணமாகும். எ - று. (இ-ம்) பிரமப்ரதி பாமாத்திரமாயுண்டாயிருக்கின்ற சீவர்கடாஞ்செய்யுஞ்சங்கற்பத்திற் கருமமுங் கருமத்திற்சுக துக்கங்களு முண்டாமென்பதாம் ............................................................ (௭)

(அ-கை.) சங்கற்பத்தைக்கெடுக்கவேண்டுமெனல். (கவி) பந்தநிதானஞ்சங்கற்ப மன்றோவதுநீபற்றறுப்பாய், முந்துசங்கற்பந்தவிர்ந்தான் முத்தியதுவாமதுதன் னைப், புந்தியதனாற்பரிசயிப்பாய்பொருளும்பொருள்கொள்பவனுமுதின், மைந்த மெள்ளவெப்போதுமறவாதொழிப்பாய்சங்கற்பம் ................................ *

(இ-ள்.) பந்தநிதானம்-பந்தத்துக்காதிகாரணமானது—சங்கற்பமன்றோ-சங்கற்பமல்லவா—அதுநீபற்றறுப்பாய்-அதைநீபற்றில்லாமற்கெடுப்பாய்— முந்துசங்கற்பந்தவிர்ந்தா ல்-முதன்மையானசங்கற்பமொழிந்தால்—முத்தியதுவாம்-மோக்ஷமதுவேயாகும்—அதுதன் னை-அசசங்கற்பநாசத்தை—புந்தியதனால்-அறிவினால்—பரிசயிப்பாய் - பழக்கஞ்செய்வாய்— பொருளும்-விஷயமும்—பொருள்கொள்பவனும் - விஷயத்தைக்கிரகிப்பவனும்— உதில்-வந்

தால்—மைந்த-குழந்தாய்—மெள்ள-மெதுவாக—எப்போதும்-எக்காலமும்—சங்கற்பம்- சங்கற்பத்தை—மறவாதொழிப்பாய்-மறவாமற்கெடுப்பாய். எ-று. (இ-ம்) பந்தத்துக்குக் காரணமான சங்கற்பத்தையெப்போதுங் கெடுக்கவேண்டுமென்பதாம் ...................................... (௮)

(அ-கை) இச்சாத்யாகமே மூத்தியெனக்கூறுதல். (கவி) கொள்ளும்பொருளாகவும்வேண்டா கொள்வோன்வடிவாகவும்வேண்டா, வெள்ளுங்கருத்தெல்லா நீக்கியெதுசேடித்தது துவாவாய், நள்ளும்பொருளொன்றினையிந்த நாடும்பொறிகளுநிலாங்கே, தெள்ளும்பற்றுள்ள துபந்தஞ்சிறக்கும்பற்றில்லதுமுத்தி ............................ *

(இ-ள்.) கொள்ளும் - கிரகிக்கப்படுகின்ற—பொருளாகவும்வேண்டா- விஷயமாகவும் வேண்டாம்—கொள்வோன் - கிரகிப்பவனுகிய ஞாதாவின்—வடிவாகவும்வேண்டா- உருவமாகவும்வேண்டாம்—எள்ளும் - நிந்திக்கின்ற—கருத்தெல்லா நீக்கி - சங்கற்பங்களனைத்தையுங்கெடுத்து—எதுசேடித்தது - எதுமிஞ்சினதோ—அதுவாவாய்- அதுவேயாவாய்—நள்ளும்பொருளொன்றினை - விரும்பப்பட்டவொருவிஷயார்த்தத்தை— இந்தநாடும்பொறிகளுநில் - இந்நாடாநின்றபஞ்சேந்திரியங்களடையுமானல்—ஆங்குதெள்ளும்பற்றுள்ளதுபந்தம்-அவ்விடத்திற்றெள்ளாநின்றவாசையையுடையதேபந்தமாகும் — சிறக்கும்பற்றில்லது - சிறக்காநின்றபற்றில்லாததே—முத்தி - மோக்ஷமாம். எ-று...................................................... (௯)

(அ-கை.) இச்சையற்பமுங்கூடாதெனல். (கவி) அற்பமுனக்கொன்றினிதாகிலதனாற்பிறப்பிலகப்பட்டாய், பொற்பவுனக்கொன்றினுமினிமைபூணுதென்னிற்பிறப்பகன்ருய், நிற்பநடப்பப்பொருட்டிரளி னினக்குத் திரணமுதலாகத், தற்பமுறுபொன்முடிவாகச்சற்றுமினிமையுறவேண்டாம்.............................................. *

(இ-ள்.) அற்பம் - அற்பமாவது—உனக்கொன்றினிதாகில் - உனக்கொரு (வஸ்) துவிலிட்டமானல்—அதனாற்பிறப்பிலகப்பட்டாய் - அவ்விச்சையாற்பவத்திலகப்பட்டாய்— பொற்ப - அழகையுடையஸ்ரீராமா—உனக்கொன்றினும் - உனக்கொருவஸ்துவிலும் — இனிமைபூணுதென்னில் - இன்பமடையாதென்றால்—பிறப்பகன்ருய் - பவத்தைநீங்கினுய்— நிற்பநடப்ப - சராசரமாகிய—பொருட்டிரளின் - வஸ்துகூட்டங்களில்—நினக்கு - உனக்கு—திரணமுதலாக - துரும்புமுதலாக — தற்பமுறுபொன்முடிவாக - மேலானகனகமந்தமாணவஸ்துக்களில்—சற்றுமினிமையுறவேண்டாம் - கொஞ்சமும்விருப்புறவேண்டாம். எ - று. (இ-உ-க-ம்) முற்றும்பற்றறுத்ததே முத்தியாதலாலொன்றையுமிச்சிக்கவேண்டாமென்பதாம் ... .......... (௰)

(அ-கை.) பற்றறச்செய்யுங்கன்மமகம்பாவமாகாவெனல். (கவி) பற்றிலாதென்னுண்ணுதியென்பண்ணுநின்ருயெதைவிடுதி, யுற்றசெய்வோன்புசிப்போனன் றுபசாந்தியனீமதிமாண்டோன், மற்றுநல்லோர்சென்றபொருட் கிரங்கார்வருவ மதித்தெண்ணுர், முற்றுநிகழ்காலப்பொருளைமுறையாலெய்திகைக்கொள்வார் ...................................... *

(இ-ள்.) பற்றிலாது - ஆசையில்லாமல்—என்னுண்ணுதி - எதைப்புசிக்கின்ருய்—என்பண்ணுநின்ருய் - எதைச்செய்கின்ருய்—எதைவிடுதி - எதைவிடுகின்ருய் — உற்றசெய்வோன்- பொருந்தினகருத்தாவும்—புசிப்போன் - போக்தாவும்—அன்று - அல்ல—நீ - நீயே—உபசாந்தியன் - உபசாந்தத்தையுடையவன்—மதிமாண்டோன் - மனமிறந்தவனுகும்—மற்றுநல்லோர் - பின்னுஞ்சத்துக்கள் —சென்றபொருட்கிரங்கார் - போனபொருளுக்கிரங்கமாட்டார்கள்—வருவமதிதெண்ணுர் - வருவனவாகியபொருளைமதித்துநினையார்கள்—முற்றும் - முழுதும்—நிகழ்காலப்பொருளை - வர்த்தமானகாலத்துப்பொருளை—முறையாலெய்தி - ஒழுங்காகவடைந்து—கைக்கொள்வார் - கைவசப்படுத்துவார்கள். எ-று .................................... (௰௧)

(அ-கை.) மனத்தைமனதினுற் கெடுக்கவேண்டுமெனல். (கவி) மதமாமோகமையன்முதன் மனத்திற்பிணித்தகயிறுகளாந், திதமாமனத்தைமனத்தாலே சேதித்திடலாமறிவோரா, விதமாநெடுங்கூர்விவேகத்தா லிரும்பாலிரும்பையறுப்பதுபோல், விதமாமனத்தைமனத்தாலே வீய்ப்பாய்பிறவிமயக்கறவே .............................. *

(இ-ள்.) மதம் - செருக்கும்—மாமோகம்- மகாமோகமும்— மையல் - இச்சையும்— முதல் - முதலானவைகள் —மனத்திற்பிணித்த - மனத்திற்கட்டிய—கயிறுகளாம் - பாசங்களையாம்—திதமாமனத்தை - திரமாகியமனதை—மனத்தால்- விவேகமனத்தினுல்— அறிவோரால்- அறிஞர்களால்—சேதித்திடலாம்- கெடுத்துவிடலாம்—இதமாம்- உரிமையான—நெடுங்கூர் விவேகத்தால்- நீண்டமகாவிவேகத்தினுலும்—இரும்பாலிரும்பையறுப்பதுபோல்- அயஸ (வாள) த்தினலயத்தைக்கெடுப்பதுபோல—விதமாமனத்தை- நாநாவிதமானமனதை— மனத்தாற்பிறவிமயக்கறவீய்ப்பாய்- ஒருப்பட்டமனதினுற்சநநமயக்கந்தீரக்கெடுப்பாய். எ-று. (இ-உ-க-ம்) மனமிறந்தகம்பாவநீங்கு முபாயமறிவித்ததாம் ...................................... (௰௨)

(அ-கை.) சீவனுக்குள்ள மூன்றுவடிவமுரைத்தல். (கவி) அழுக்கைப்பழுக்காற்கழுவுவர் கொல்லம்பையம்பாற்றடைசெய்வர்; வழுக்குநஞ்சையெதிர்நஞ்சான்மாற்றுவிற்பர்மதியுடையோ, ரொழுக்கமுறுஞ்சீவர்க்குபயந்தூலசூக்கமென, விழுக்கமாமொன்றுயர்பரமா மிதுசேர்ந்தந்தவிரண்டொழிப்பாய். ..................... *

(இ-ள்.) மதியுடையோர் - அறிவுள்ளவர்கள்—அழுக்கை-(துகிலின்)களங்கத்தை—அழுக்காற்கழுவுவர்- (உவர்மண்முதலியகளங்கத்தால்)கழுவுவார்கள் —கொல்- கொலைசெய்கின்ற—அம்பை- (அக்கினியா)ஸ்திரத்தை—அம்பாற்றடைசெய்வர் - (வருணா)ஸ்திரத்தினாற்றடுப்பார்கள்—வழுக்குநஞ்சை- (தின்றும் வழுவாகியவிடத்தை—எதிர்நஞ்சால்- அவிழ்தமாகியவிஷத்தால்- மாற்றுவிற்பர்- நீக்குவார்கள் (அதுபோல)—ஒழுக்கமுறுசீவர்க்கு - உயர்வுள்ளசீவனுக்கு—மூன்றுள- மூன்றுவடிவமுண்டு—உபயம்- இரண்டு—தூலசூக்கமெனவிழுக்கமாம்-தூலமென்றுஞ்சூக்குமமென்றுமிழிவுள்ளதாம்— ஒன்றுயர்பரமாம் - ஒன்றுமேலானபிரமமாம் — இதுசேர்ந்து-இப்பிரமத்தையடைந்து— அந்தவிரண்டொழிப்பாய் - அத்தூலசூக்குமமானவிரண்டையுநீக்குவாய். எ-று ..................... (௰௩)

(அ-கை.) அவைகளிற்றூலஞ் சூக்குமமென்னு மிரண்டுவடிவி னிலக்கணங் கூறல். (கவி) மேகமனையாய் கைகால்கண் மேவுமிந்தவுடறானே, போகமுண்ணச்சீவனுக்குப்பொருந்துதூலவுருவாகும், பாகமருவுசங்கற்ப மயமாய்ப்பவபாவனைபண்ணுஞ், சோகமனஞ்சீவனுக்குருவாஞ் சூக்கவாதிவாகியமே..................... *

(இ-ள்.) மேகமனையாய் - முகிலுக்கொப்பானஸ்ரீராமா—கைகால்கண்மேவு - கரசரணநேத்திரமும்மேவிய—இந்தவுடறானே-இச்சரீரமே—போகமுண்ண-போகத்தையனுபவிக்க—சீவனுக்கு-புமானுக்கு—பொருந்து-பொருந்திய—தூலவுருவாகும்-தூலசரீரமாகும்— பாகமருவு-பிரிவுள்ள—சங்கற்பமயமாய் - சங்கற்பாகாரமாய்—பவபாவனைபண்ணும்- சம்சாரபாவனையைச்செய்கின்ற—சோகமனம் - துன்பமுள்ளமனமானது—சீவனுக்கு-ஆத்மாவுக்கு— சூக்கவாதிவாகியம் - சூட்சுமமானவாதிவாகிய—உருவாம் - வடிவமாம். எ-று ..................... (௰௪)

(அ-கை.) மூன்றாவதானபரவடிவின்லக்கணங்கூறல். (கவி) மெய்யாய்மூலமீறின்றி விகற்பமறுசின்மாத்திரமே, மொய்யார்சிவன்பரவடிவா மூன்றுவதுமுண்டகம் போற், கையாய்சுத்ததுரியபதங்கண்டாயிதுவேயிதிலழுந்தி, மையார்முதற்சொல்வடிவிரண்டு மாற்றியவைதானெனவேண்டா ..................... *

(இ-ள்.) மெய்யாய் - தத்துவமாய்—மூலமீறின்றி - ஆதியந்தமில்லாமல்—விகற்பமறுசின்மாத்திரமே- வேறுபாடில்லாதஞானமாத்திரமே—மொய்யார்சிவன் - நிறைந்தசிவசமுகத்துக்கு—மூன்றுவது- மூன்றவதான—பரவடிவமாம் - பிரமஸ்வரூபமாம்—முண்டகம்போல்-தாமரைமலரைப்போல—கையாய் - கரங்களையுடையஸ்ரீராமா— சுத்ததுரியபதம் - பரிசுத்தமானதுரியபதமானது—இதுவேகண்டாய் - இதுவேயாம்—இதிலழுந்தி- இத்துரியபதத்தின் மூழ்கி—மையார்- களங்குமுள்ள— முதற்சொல்வடிவிரண்டும் - முன்சொன்னவிரண்டுவடிவங்களையும்—மாற்றி - கெடுத்து—அவை - அவ்விரண்டையும்—நாமெனவேண்டா- நாமென்று சொல்லவேண்டாம். எ-று. (இ-௯-ம்) ஆத்மாவுக்குப் போகநிமித்தமுண்டான தூலதேகத்தையும்பவபாவனைசெய்கின்ற சங்கற்பமாகிய சூக்குமதேகத்தையுந்தள்ளியாதிமத்யாந்தரகிதசின்மாத்திரமான துரியமே தனதுபரவடிவமாகத் தியானித்து அவித்தாமயமானகாரணதேகத்தைக்கெடுக்கவேண்டுமென்பதாம் ..................... (௰௫)

(அ-கை.) துரியவிலக்கண மியாதெனவினவுதல். (கவி) என்னுமுனியையிராமனும் பார்த்தெந்தாய்நனவுகனச்சுழுத்தி, துன்னுமதுவாயினமூன்றிற்றோன்றுமதுவாந் துரியத்தை, யன்னிவிசேடமுறவுரைப்பாயுயர்ந்தமுனிநாயகவென்ன, மன்னுமமுதமழைபோலும் வாக்கால்வசிட்டமுனியருள்வான் ..................... *

(இ-ள்.) என்னுமுனியை - இப்படியென்றுசொல்லியவசிஷ்டமுனியை — இராமனும் பார்த்து- ஸ்ரீராகவனுநோக்கி—எந்தாய்-என்துபிதாவே—நனவுகனச்சுழுத்தி-சாக்கிரசொப்பனசுழுத்திகள் —துன்னுமதுவாயினமூன்றில்- நெருங்கியவவ்வவத்தைகளாயிருக்கின்றமூன்றில்—தோன்றுமதுவாந்துரியத்தை—அதுவாந்துரியத்தையுன்னி-அப்பிரமமாயிருக்குந்துரியத்தை நினைத்து—விசேடமுற - விசேஷம்பொருந்த—உயர்ந்தமுனிநாயக - மேலானமுனிசிரேஷ்டனே—உரைப்பாயென்ன - சொல்லுவாயென்றிராமன்கேட்க — மன்னுமமுதமழைபோலும்- நிறைந்தவமுதவருஷத்தைப்போலும்—வாக்கால் - வசனத்தினால் — வசிட்டமுனியருள்வான்- வசிஷ்டமுனிசொல்லுவார். எ-று ..................... (௰௬)

(அ-கை.) துரியவிலக்கணங்கூறல். (கவி) அகமென்பதுமென்றதுவு முளதுமில
துமறவிட்டு, நிகழுஞ்சமமாய்ப்பற்றறத்தன் னிலைக்கேநிற்றற்றுரியமதாந், தகுதன்
னிலையாச்சமமாகிச் சகத்தின்றொழிற்குச் சான்றாகி, புகல்சீவனின் முத்தியுமாகிப்
பொருகற்பனைதீர் நிலைதுரியம்...... *

(இ-ள்.) அகமென்பதும் - நானென்பதும்— என்றதுவும் - நானென்றதுவும்— உளதுமிலதும்- உள்ளதுமில்லாததுமாகியவிவைகளை—அறவிட்டு - ஒருங்கேநீக்கி— நிகழுஞ்சமமாய்- விளங்காநின்றசமத்துவமாய்—பற்றற- இச்சையறும்படி—தன்னிலைக்கேநிற்றல்- ஆத்மநிச்சயத்திலிருத்தல்—துரியமதாம் - துரியமாகும்—தகுதன்னிலையாய் - மேலானவாத்மநிச்சயமாகியும்—சமமாகி - சமமாகியும்— சகத்தின்றொழிற்கு - உலகத்தினதுகிரிகைகளுக்கு—சான்றாகி- சாட்சியாகியும்—புகல்சீவனின் முத்தியுமாகி - சொல்லப்பட்டசீவன்முத்தியாகியுமிருக்கின்ற—பொருகற்பனைதீர்- பொருதுகின்றகற்பனைகணீங்கிய—நிலைதுரியம்- நிலையேதுரியபதமாம். எ-று. (இ-ம்) ஆகமூன்றுமவத்தை மூன்று மபிமானமூன்றுமாகிய வொன்பதுடன் கூடி வெளிமுகமாயிருந்து விஷயசுகஞ் சுகிக்கும்போது சீவசிதாபாசனென்று மிவைகளைக் கற்பனையென்றறிந் திவைகளிற்செல்லாமற் றனித்திருக்கும்போது சீவனென்றுந் தனதாநந்தத்தையனுபவிக்கும்பொருட் டகமுகத்திற்சென் றனைத்திற்குஞ்சாட்சியாய் நிற்கும்போது கூடஸ்தனென்று மிங்ஙனம் விளங்குவது சீவதுரியமென்று மிங்ஙன மண்டங்களின் விளங்குதலீஸ்வர துரியமென்று மண்டபிண்டங்களி லிங்ஙனம் பூரணமாகவிளங்குதல், பிரமதுரியமென்றுமிவைகளோடுங் கூடியுங் கூடாமற் ப்ரகாசயா யாதுயாதெப்படி யெப்படியோ வதுவதப்படியப்படியாய் விளங்குங்குரு துரியமென்பதைச் சுருக்கி யகப்பாவநீங்கிச் சமதிருஷ்டியாற் சர்வசாட்சியாயிருத்தலே துரியமெனக் கூறினதாம் ...... (௰௭)

(அ-கை.) இ-து. (கவி) இதுதானனவுகனவல்லவிடர்சங்கற்பமிலாமையினாற், பொதுவா
ஞ்சுழுத்திதானன்று போதமின்மைதீர்தலினாற், சதுராவிந்தச்சகநன்றாந்தனதுநிலைக்கே
சமித்திறக்கு, முதுஞானிகட்கிங்கிதுதுரிய மூடர்க்குலகந்திரநிலையாம்...... *

(இ-ள்.) இடர்சங்கற்பம் - துன்பமாகியசங்கற்பமானது—இல்லாமையினால் - இல்லாததினால்—இதுதானனவுகனவல்ல - இதுசாக்கிரமுஞ்சொற்பனமுமல்ல— போதமின்மைதீர்தலினால்- சாட்டியமில்லாதபடியினால்—பொதுவாஞ்சுழுத்திதானன்று - சாதாரணமானசுழுத்தியுமல்ல—சதுரா - சதுரானஸ்ரீராமா—இந்தச்சகம் - இவ்வுலகமானது—நன்றாம்- நன்மையாகிய—தனதுநிலைக்கு- ஆத்மாவினிடத்தில்—சமித்திறக்கும்- சீரணித்துக்கெடும்—முதுஞானிகட்கு- முதிர்ந்தஞானிகளுக்கு—இங்கிதுதுரியம் - இவ்விடத்திலிதுவேதுரியமாகும்—மூடர்க்கு- மூடர்களுக்கு—உலகம்- சகமானது—திரநிலையாம்- திடநிலையாகும். எ-று. (இ-ம்) இத்துரியமவத்தாத்திரயமான பௌதிகமுமதற்குக் காரணமான பாஞ்சபூதமுமன்றென்பதாம் (௰௮)

(அ-கை.) இத்துரியமடையுமிலக்கணங்கூறி யிஃதடைந்தவரிலக்கணங் கூறத்தொடங்கல். (கவி) யானுமெண்ணமறிற்சமந்தானெய்திச்சித்தமொருக்காலு, மாறுவினை
செய்யாதபடியாக்கிற்றுரியநிலைநிற்கு, ஞானாதீதனுங்கிழவோ னெனினுஞானதனி
மேவ, மேனாணடந்ததொருசரிதை கேட்பாய்மேதைகளின்மிக்கோய்...... *

(இ-ள்.) யானுமெண்ணமறில்-நானென்கின்றநினைவானதற்றால்—சமந்தானெய்தி- சமத்துவத்தையடைந்து—சித்தம்-மனதை—ஒருக்காலும்-ஒருபோதும்—ஆறுவினை- நீங்காததொழிலை—செய்யாதபடியாக்கில் - செய்யாதவிதஞ்செய்தால்—துரியநிலைநிற்கும்- துரியநிலையுண்டாயிருக்கும்—ஞானாதீதனுங்கிழவோன் - ஞானாதீதனாகியதலைவன்—எனினும்- நீயானாலும்—ஞானதனிமேவமேனாணடந்தது - ஞானமிகவும்பொருந்தமுற்காலத்தினடந்ததாகிய—ஒருசரிதை- ஒருகதையை—மேதைகளின்மிக்கோய் - அறிவில்மிகுந்தஸ்ரீராமா— கேட்பாய்-கேட்கக்கடவாய். எ-று...... (௰௯)

(அ-கை.) துரியதிருஷ்டியுள்ளவனைவிஷயதிருஷ்டியைவினாவுதல்(கவி)பெரியவடவி
யொன்றிடையோர் பெரியமுனிவன்மகாமவுனம், புரியுநிலையோனவன்றனையோர்
பொருவில்வேடன்வந்தணுகி, யெரியுமென்கைக்கணைபடநொந்திங்கோர்நவ்வியோ
டியதாற், றெரியவஃதெங்ககன்றதெனச்செப்புமுனிவவெனக்கேட்டான்...... *

(இ-ள்.) பெரியவடவியொன்றிடை - மகத்தானவோராரணியத்தில்— ஓர்பெரியமுனிவன் - ஒருமகாதபசியானவர்—மகாமவுனம் - மகாமவுனத்தை—புரியுநிலையோன் - விரும்புகின்றநிலையையுடையவன்—வேடனணுகிவந்து - வேடனானவனெருங்கிவந்து — எரியுமென்கைக்கணைபடநொந்து-எரியாநின்றவென்கையம்பானதுபட்டுவருந்தி— இங்கோர்நவ்வியோடியது- இவ்விடத்தொருமானோடிவந்தது—அஃது- அந்தமான்—எங்ககன்றதென - எவ்விடத்திற்போ

யிற்றென்று—முனிவ - தபசியே—தெரியச்செப்புமெனக்கேட்டான் - தெரியச்சொல்லுமெ ன்றுகேட்டான். எ-று ........................................................................ (௨௰)

(அ-கை.) விஷயத்தைவினவத் துரியத்தைக்கூறுதல். (கவி) கேட்டகிராதன்றனைய ந்தக்கேடின்முனிபார்த்தினியோனே, காட்டிலுறைவோர்சமநிலைமைக்கண்ணுமுனி வர்கணநாங்க, ளுட்டுவிகாரம்புரிபு நவையாங்காரமாகிலநாங், கூட்டுபொறியின் றொழிலெல்லாங் கொள்ளுமனஞ்செய்குவதன்றோ.......................... *

(இ-ள்.) கேட்டகிராதன்றனை - இப்படியென்றுகேட்டவேடனை — அந்தக்கேடில்முனி பார்த்து- அக்களங்கமற்றதபசியானவர்பார்த்து—இனியோனே - நற்குணமுள்ளவனே—காட் டிலுறைவோர்- கானகத்தில்வசிப்பவர்கள் — சமநிலைமைகண்ணும் - சமநிலையானதிருஷ்ட்டி யையுடையவர்களாயிருக்கின்ற—நாங்கள்- யாங்கள்—முனிவர்கணம்- தவசிகள்கூட்டம்—நாட் டுவிகாரம்புரியும்- சகத்தின்றொழிலைச்செய்கின்ற—நவையாங்காரநாமாகிலம் - குற்றமுள்ளவ கங்காரம்யாங்களாகமாட்டோம்—கூட்டுபொறியின்- (விஷயத்திற்)சேர்க்காநின்றவிந்திரியங்க ளினது —தொழிலெல்லாம - விவகாரங்களனைத்தையும்—கொள்ளும்- கிரகியாநின்ற — மனஞ் செய்குவதன்றோ - மனஞ்செய்வதல்லவா. எ-று ........................................................ (௨௧)

(அ-கை.) துரியதிருஷ்டியில் விஷயதிருஷ்டியின் றுமெனல். (கவி) அதனுலகங்கா ரத்துருவாமந்தமனநிச்சயமாகத், திதமாய்நழுவிநெடுநாளாஞ் செறிசாக்கிரசொ ற்பனசுழுத்தி, பதமாமவையொன்றையுமறியேன் பரமதுரியநிலையானேன்,விதமா ய்காணப்படுபொருள்கள் விமலதுரியத்திலதென்றான்........................... *

(இ-ள்.) அதனுலகங்காரத்துருவாம்- அதனுலகங்காரவடிவமாகிய— அந்தமனம்-அந்த மனமானது—நிச்சயமாக - மெய்யாக—திதமாய்நழுவி - திரமாய்விடுபட்டு— நெடுநாளாம்- வெகுகாலமாயிற்று—செறிசாக்கிரம்- நெருங்கியநனவும் —சொப்பனம்- கனவும்—சுழுத்திப தமாம்- சுழுத்தியவத்தையுமாகிய —அவையொன்றையுமறியேன்- அவைகளொன்றுந்தெரியா து—பரமதுரியநிலையானேன் - மேலானதுரியநிலையாயினன்—விதமாய் - நாநாவிதமாகவிரு க்கின்ற—காணப்படுபொருள்கள்- திரிஸ்யங்கள்—விமலதுரியத்திலதென்றான்- நின்மலதுரியத் தில்லையென்றுசொன்னார். எ-று. (இ-ச-க-ம்) அகம்பாவநீங்கிச் சமதிருஷ்டியி லிருப்பவர்களு க்குத் துரியமன்றி விஷயந்தோற்றா வென்பதாம் ........................................ (௨௨)

(அ-கை.) திருஷ்டாந்தஞ்சொல்லி துரியத்தைத்தவிரவேறின்றெனல். (கவி) தீதின் முனிவருரைபொருள்க டெரியாவேடனுங்ககன்று, னாதலாற்கேடுரியத்துக்கயலோர் நிலையுமுளதன்று, லேதமானவிகற்பமெலா மிறந்தவறிவேதுரியமதா, மீதலாதிங் கயலொன்றுமில்லைக்கண்டாயிராகவனே.................................... *

(இ-ள்.) தீதின்முனிவர் - குற்றமற்றதபசையுடையவர்—உரைபொருள்கள்- சொல்லப் பட்டவருத்தங்களை—தெரியாவேடன் - அறியாதவேடனானவன் — ஆங்ககன்றான் - அவ்விடம் விட்டுநீங்கினான்—ஆதலாற்கேள் - ஆதலினாற்கேட்பாய்— துரியத்துக்கு - துரியபதத்துக்கு— அயலோர்நிலையுமுளதன்று- வேறாகவொருநிலையுமுள்ளதல்ல— ஏதமான - குற்றம்பொருந்தி ய—விகற்பமெலாமிறந்தவறிவே- வேற்றுமைகளனைத்துநீங்கியஞானமே—துரியமதாம்- துரி யமாகும்—ஈதலாது- இதையல்லாமல்—இங்கு- இவ்விடத்தில்—இராகவனே - ஸ்ரீராமா—அய லொன்றுமில்லைகண்டாய் - வேறொன்றுமில்லை. எ-று ........................................(௨௩)

(அ-கை.) அவத்தாத்ரயவிலக்ஷணமேதுரியமெனல். (கவி) கண்டநனவுகோரமதாங் கனவுசாந்தமெனப்பெயராங், கொண்டசுழுத்திமூடமதாங் கூறுமிம்மூன்றவத்தை களும், விண்டமனத்தின்வடிவாகும்விளம்புமிம்மூன்றையும்விட்டாற், றண்டுமனம் போமனமிறந்தாற் சத்தாயொன்றாஞ்சமநிலையாம்................................ *

(இ-ள்.) கண்டநனவு- கண்டிருக்கப்பட்டசாக்கிரம்—கோரமதாம்-கோரவிருத்தியாகு ம்—கனவு-சொப்பனம்— சாந்தமெனப்பெயராம் - சாந்தவிருத்தியென்றுநாமமுள்ளதாகும் —கொண்டசுழுத்தி - கொண்டிருக்கப்பட்டசுழுத்தியே—மூடமதாம்- மூடவிருத்தியாகும்— கூறும்- சொல்லப்பட்ட—இம்மூன்றவத்தைகளும்- இந்தமூன்றவத்தைகளும்—விண்டமனத் தின்வடிவாகும்- பகுக்குமனத்தினுருவமாகும்—விளம்புமிமூன்றையும்விட்டால்- சொல்லப் பட்டவிம்மூன்றவத்தைகளைநீக்குதல்— தண்டுமனம்போம் - தட்டப்பட்டமனநீங்கும்— மனமிறந்தால்- மனநசித்தால்—சத்தாய்- சத்தாகி—ஒன்றாம்-அத்துவிதமான—சமநிலையா ம்—சமநிலையுள்ளதாகும். எ-று ........................................................ (௨௪)

(அ-கை.) துரியபதத்திற்சுகிப்பாயெனல். (கவி) அந்தநிலையேயோகிகடா மரிதிற்
சாதித்தடைகின்றார், வெந்ததுயர்செய்சங்கற்ப விகற்பமிலாத துரியத்தே, மைந்த
நிலையாயிடர்தீர்வாய் மகத்தாயுயர்ந்தமுனிவரராய்ப், பந்தமிலராய்ப்பேதமறும்ப
ழையோர்விடாதெப்பதத்துறைவார் ........ ................................................ *

(இ-ள்.) அந்தநிலையே- அந்நிச்சயத்தையே—யோகிகடாம் - ஞானவான்கள்—அரிதில்-அரிதாக—சாதித்தடைகின்றார் - அற்பியசித்தடைகின்றார்கள்—மகத்தாய் - மகத்துக்களாகியும்—உயர்ந்தமுனிவராய் - மேன்மைபொருந்தியவிருஷிகளாகியும்—பந்தமிலராய் - பந்தமில்லாதவர்களாகியுமிருக்கின்ற—பேதமறும்பழையோர் - அபேதத்தையுடைய பழைமையானசீவன்முத்தர்கள்—விடாது- நீங்காமல்—எப்பதத்துறைவார் - எந்தத்துரியபதத்தில்வசிப்பார்களோ—வெந்ததுயர்செய் - வேகின்றதுன்பத்தைச்செய்யும்— சங்கற்பவிகற்பமில்லா- சங்கற்பவிகற்பங்களிறந்த—துரியத்து - அத்துரியபதத்தில்—மைந்த - குழந்தாய்—நிலையாய்- திரமாயிருந்து—இடர்தீர்வாய் - துன்பத்தினின்றுநீங்கக்கடவாய். எ-று. (இ-ரு-க-ம்) இங்ஙனங்கூறியதுரியத்திற்சுகிக்கி லதுவேதுரியாதீதமான விதேகமுத்தியைக்கொடுக்குமென்பதாம்........... (௨௫)



மானுவேடன்கதைமுற்றிற்று. ஆ. கதை-௪௨௩- கவிதை. (௩௬௮௯)



# நிருவாணப்பிரகரணம்.

(அ-கை.) முற்கதையிற் ப்ரத்யேகாத்மஸ்வரூபமான துரியானுபவிக்கு வாகியத்திற் றிரிஸ்யதிருஷ்டியின்றி திருக்குஸ்வரூபமாய் விளங்குவதையறிவித்து, இத்துரியமே சர்வம்பிரமமயமென்னுந் துரியாதீதமாய் விளங்குவதை யறிவிக்குநிமித்த மிந்த ஞானசாஸ்திரார்த்தம் ஞானபூமி காசாரமானபடியா லஃதின் ஸ்வரூபத்தைவிரித்துப் பதினான்குகதையின் சாரமான நிருவாணப்ரகரணத்தை நிரூபிக்கிறார்..... ............................................................................ *

(அ-கை.) சர்வம் பிரமமயமாய் விளங்குதேயன்றி வேறின்றெனல். (கவி) வேறு.
எனைத்துஞானநன்னூலி னியம்புமறுதி யாதென்னி, லனைத்துங்கனவு காண்பது
வேயன்றோவவிஞ்சையிங்கில்லை, வினைத்தின்கவலைசெய்கின்ற வெய்யமாயைதானி
ல்லை, தினைத்துன்பமுமற்றுபசாந்தத்திறமாமிதுவேதிகழ்பிரமம் ... .... ............... *

(இ-ள்.) எனைத்துஞானநன்னூலின் - சமஸ்தவாத்மஞானசாஸ்திரங்களில்—இயம்பும்- சொல்லப்பட்ட—அறுதியாதென்னில் - நிச்சயமெதுவென்றால்—அனைத்தும் - எல்லாவற்றையும்—கனவுகாண்பதுவேயன்றோ- சொற்பனமாகப்பார்ப்பதல்லவா—இங்கு- இவ்விடத்தில்—அவிஞ்சையில்லை - அவித்தையுமில்லை—வினைத்தின் - தொழிலினது—கவலைசெய்கின்ற- துன்பங்களைச்செய்கின்ற—வெய்யமாயைதானில்லை - கொடியமாயையுமில்லை— தினைத்துன்பமுமற்று - தினையளவுதுன்பமுமில்லாமலிறந்து—உபசாந்தத்திறமாம்- உபசாந்தத்தன்மையாகிய—இதுவேதிகழ்பிரமம் - இதுவேவிளங்காநின்றபிரமஸ்வரூபமாம். எ-று. (இ-ம்) சகலவேதார்த்த சம்மதமான நிச்சயம் மாயைமுதலியயாவுங்கனவைப்போலக் கண்டகற்றி யாவுந்தனதுஸ்வானுபூதி சாக்ஷாத்காரமாக விளங்குதென்றறிவதென்பதாம்.................... ......................... (௧)

(அ-கை.) இப்பிரமத்தையே மதாந்தரங்களினுமபேதங்களாக நிச்சயிக்கப்பட்டிருக்கு
தெனல். (கவி) சாந்தமாகிச்சிதம்பரமாய்ச்சமமாய்நொய்தாயான்மாவா, யெந்துசத்தி
யளவிலதாயிடும்பேர்பிரமமெனுமிதற்கே, சேர்ந்தபலநிச்சயம்பண்ணிச் சிலர்பாழென்
பர்பரமேசன், வாய்ந்தவுருவமென்பர்சிலர்மாவிஞ்ஞானமென்பர்சிலர் .... ................ *

(இ-ள்.) சாந்தமாகி - உபசாந்தமாகியும்—சிதம்பரமாய்-சிதாகாசமாகியும்—சமமாய்- சமமாகியும்—நொய்தாய் - சொச்சமாகியும்—ஆன்மாவாய் - ஆத்மாவாகியும்— எந்துசத்தி- தரிக்கப்பட்டசத்திகள்—அளவிலதாய் - அநந்தமாகியும்—பிரமமெனும் - பிரமமென்னும்— இடும்பேர் - தரிக்கின்றநாமமுடையதாயுமிருக்கின்ற — இதற்கே - இந்தப்பிரமத்துக்கே— சேர்ந்தபலநிச்சயம்பண்ணி - சார்ந்திருக்கின்றவநேகநிச்சயங்களைச்செய்து — சிலர்பாழென்பர் - சிலமதஸ்த்தர்சூனியமென்றுசொல்லுவார்கள்—சிலர் - சிலமதஸ்த்தர்—பரமேசன் - பர

மேசன் - பரமேஸ்பரனுடைய—வாய்ந்தவுருவமென்பர்- பொருந்தியவடிவமென்றுசொல்லுவார்கள்—சிலர் - சிலமதஸ்தர்—மாவிஞ்ஞானமென்பர் - மகாவிஞ்ஞானமாகப்ரகாசிக்குமென்றுசொல்லுவார்கள். எ-று. (இ-ம்) ஸ்வானுபூதியையே சூனியமுதலியவஸ்துவாக நிச்சயிக்கப்பட்டிருக்குதென்பதாம் ............................................................(௨)

(அ-கை.) வஸ்துநிச்சயங்கூறியபின்தாய் விளங்குமுபாயமுங் கூறல். (கவி) எல்லாநீக்கி மகாமவுனத்திருப்பாய் நிருவாணத்தினனாய்ப், பொல்லாமனம்போய்ச் சித்தம்போய்ப் புத்திபோய்த்தானென்பதுபோய்ச், சொல்லாவூமை குருடுசெவி டொத்துத்தூயவான் மாவி, லில்லாயுள்ளேமுகமாகிநித்தநொய்தாய்நிறைமதியாய் ............ ............... *

(இ-ள்.) எல்லாநீக்கி - சகலத்தையுமொழித்து—மகாமவுனத்திருப்பாய் - மகாமவுனத்தினிற்கக்கடவாய்—நிருவாணத்தினனாய் - மோக்ஷத்தையுடையவனாய்— பொல்லாமனம்போய்-பொல்லாங்கைச்செய்யுமனது நீங்கி—சித்தம்போய் - சித்தநீங்கி—புத்திபோய் - புத்திநீங்கி—தானென்பதுபோய்-நானென்பதுநீங்கி—சொல்லாவூமை-பேசாதவூமையனுக்கும்— குருடு-அந்தகனுக்கும்—செவிடு - செவிடனுக்கும்—ஒத்து- ஒப்பாகி—தூயவான்மாவில் - பரிசுத்தமாகியவான்மாவில்—உள்ளேமுகமாகி - அகமுகத்தையுடையவனாய்—நித்தம் - எக்காலமும்—நொய்தாய் - சொச்சமாகியும்—நிறைமதியாய் - பூரணஞானத்தையுடையவனாயும்—நில்லாய்-நிற்கக்கடவாய். எ-று. (இ-ம்) மகாமவுனத்தாலாத்மாவிற்சுகித்திருப்பாயென்பதாம் .........(௩)

(அ-கை.) சித்தத்யாகவுபாயங்கூறல். (கவி) நனவிற்சுழுத்திநிலைமேவி நன்றுயெல்லாமுள்ளகற்றி, தனதிச்சையில்வந்ததுபுறத்தேசமைப்பாய்சித்தமுண்டாகைக், கனதுக்கமதாஞ்சித்தமறிற்கனத்தசுகமாஞ்சித்தத்தை, யுனதுட்படுத்தியுணர்வின்மையாலேயொழிப்பாயுணர்வுருவாய் ........ ................. .......*

(இ-ள்.) நனவிற்சுழுத்தி - சாக்கிரசுழுத்தியினது—நிலைமேவி- தன்மையையடைந்து—நன்றாய் - நன்றாக—எல்லாமுள்ளகற்றி - சகலத்தையுமுள்ளேதள்ளி — தனதிச்சையில் - தனதிச்சாப்ரகாரம்—வந்தது - வந்ததை—புறத்தேசமைப்பாய் - வெளியில்செய்வாய்—சித்தமுண்டாகை - மனமுண்டாதல்—கனதுக்கமதாம் - மிகுந்ததுன்பமாகும்—சித்தமறில் - மனமிறந்தால்—கனத்தசுகமாம் - பேராநந்தமாம்—சித்தத்தை - மனதை—உனதுட்படுத்தி-உனதுவசமாக்கி—உணர்வின்மையால் - அசம்வேதனத்தினால்— உணர்வுருவாய் - ஞானஸ்வரூபமாய்—ஒழிப்பாய் - நீக்குவாய். எ-று .......................................................................(௪)

(அ-கை.) சுகதுக்கசமத்துவமாயிருப்பாயெனல் (கவி) சோகநன்மைநிமைகளைச்சூழ்வுற்றிருந்துஞ்சமமாகிப், பாகமின்றிக்கற்போலப்படிந்துநிற்பாய்பலபிறவி, மோகமகலுமவ்வளவுமுயலுந்தனதுமுயற்சியினு, ஞகமலையாய்சுகதுக்கநடுவுள்ளதுநீநாடலையாய் *

(இ-ள்.)சோகம்-துன்பமாயிருக்கின்ற—நன்மைநிமைகளை-இதாகிதங்களை--சூழ்வுற்றிருந்தும்-சூழ்ந்திருந்தும்—சமமாகி-சமத்துவமாகி—பாகமின்றி-பிரிவில்லாமல்—கற்போல-கல்லைப்போல— படிந்துநிற்பாய்-பொருந்தியிருப்பாய் — பலபிறவி- அநந்தசநநங்களினது—மோகமகலும்-மயக்கநீங்குகின்ற—அவ்வளவும்-அதுபரியந்தம்—முயலும்-முயற்சிக்கின்ற—தனதுமுயற்சியினால்-தனமெதத்தனத்தினால்—நகமலையாய்— மலைக்கொப்பாகியஸ்ரீராமா—சுகதுக்கம்-இன்பதுன்பம்—நடுவுள்ளதும்-சுகாசுகமும்—நீநாடலையாய்-நீநாடாதே. எ-று.(௫)

(அ-கை.) இவ்வனுசந்தானத்தான் முத்தியுண்டாமெனல். (கவி) இந்தவளவாந்தன்முயர்ச்சியிடர்தீர்முடிவில்பதமளிக்குஞ், சிந்துகலைகணிறைமதிபோற் சீதவமுதேயுண்ணிறைய,வந்தவறிவன்சுகமடைவனகிலவுலகின்பொருட்சார, முந்தவறிந்துசெயற்செய்யாதவனாய்முத்தியெய்திடுமே.... ................ ......... *

(இ-ள்.) இந்தவளவாம் - இவ்வளவாகிய—தன்முயற்சி - தனதுமுயற்சியானது — இடர்தீர் - துன்பமில்லாத—முடிவில்பதமளிக்கும்- முடிவற்றபிரமபதத்தைக்கொடுக்கும்—சிந்துகலைசனிறை - சிதறுநின்றவமுதகலைகணிறைந்த — மதிபோல் - சந்திரனைப்போல—சீதவமுதேயுண்ணிறைய - குளிர்ந்தவமுதமானதுள்ளத்தின்கண்ணிறைய — அந்தவறிவன்சுகமடைவன் - அவ்வறிவையுடையவன்சுகத்தையடைவான் — அகிலவுலகின்பொருட்சாரம் - சகங்களினதுவஸ்துசத்தையை—முந்தவறிந்து - முன்னேதெரிந்து—செயற்செய்யாதவனாய்- தொழிலைச் (செய்துஞ்) செய்யாதவனாய் — முத்தியெய்திடும் - மோக்ஷத்தையடைவன். எ - று. (இ-௫-௬-ம்) பிரமாற்பியாசத்தாற் பிரமாபரோக்ஷமுண்டாமென்பதாம் ........................(௬)

(அ-கை.) அபரோக்ஷஞானனுபவத்தைப் பெறுதற்குமுக்கிய காரணமான ஞானபூமியினற்பியாசமுமஃதையடைந்தவர்களிலிலக்கணமு மியாதென்ற வினாவின்

முதல்வினவுக்குத்தரங்கூறத்தொடங்கி ப்ரவிர்த்தனிவிர்த்தனென விருவருண்டெனல். (கவி) யோகபூமியேழுக்குமுறுசெய்தொழில்களெவ்வண்ண,மாகவிந்தப்பூமிகளையடைந்தயோகிக்கெதுகுறிகண், மோகமில்லாயுரையென்னமுனிவனிராமற்குரைசெய்வான், போகவசஞ்செல்பவன்மீண்டோனென்றுபுருடரிருவகையாம் ...*

(இ-ள்.) யோகபூமியேழுக்கும் - ஞானபூமியேழுக்கும்—உறுசெய்தொழில்கள்-பொருந்தச்செய்யுமற்பியாசங்கள்—எவ்வண்ணம் - எப்படியாகும் — ஆகவிந்தப்பூமிகளை - ஆகியவிந்தஞானபூமிகளை—அடைந்தயோகிக்கு - அடைந்தஞானிகளுக்கு — எதுகுறிகள் - என்னவடையாளங்கள்—மோகமில்லாய் - மயக்கமற்றவரே—உரையென்ன - சொல்லுவாயென்றுகேட்க—முனிவன் - வசிஷ்டமுனியானவர் — இராமற்குரைசெய்வான் - ஸ்ரீராகவற்குச்சொல்லுவார்—போகவசஞ்செல்பவன் - போகவசத்திற்செல்லுபவனென்றும் — மீண்டோனென்று- திரும்பினவனென்றும்—புருடரிருவகையாம் - ஆத்மாக்களிரண்டுவிதமாம். எ-று .........(எ)

(அ-கை.) ப்ரவிர்த்தனிலக்கணங்கூறல். (கவி) சுவர்க்கமுத்திகளைவிரும்பித்தொடருமவர்தங்குறிகேளா, யுவக்கும்வீடேயெவ்வளவிற்றுலகநடையேயுயர்ந்ததெனு, நிவக்குமறுதி யாற்செய்வோ னெடும்போகத்திற் செல்பமனு, மெவர்க்கும்விவேகமுறுபிறவியெய்தற்கரியவியல்பினதே..... ......... ..... ............ ......... ... .....*

(இ-ள்.) சுவர்க்கமுத்திகளைவிரும்பி-போகமோக்ஷங்களையிச்சித்து—தொடருமவர்தம்-தொடராநின்றவவர்களுடைய—குறிகேளாய்-அடையாளங்களைக்கேட்பாய்—உவக்கும்வீடு-மகிழாநின்றமோக்ஷமானது—எவ்வளவிற்று-எவ்வளவாகும்— உலகநடையே - சகத்தினொழுங்கே—உயர்ந்ததெனு-மேலானதாயென்று—நிவக்குமறுதியால்-ஓங்கியநிச்சயத்தினால்--செய்வோன்-செய்பவன்—நெடும்போகத்தில்-பெரிதானபோகத்தில்—செல்பவனும்-செல்லும் (பிரவிர்த்தனும்—எவர்க்கும்-யாவர்க்கும்—விவேகமுறுபிறவி- விவேகமடைந்திருக்கின்றசநநமானது—எய்தற்கரிய-அடைதற்கரிய—இயல்பினது - தன்மையையுடையது. எ-று...................... (அ)

(அ-கை,) நிவிர்த்தனிலக்கணங்கூறல். (கவி) எறியுங்கடலினுகத்துளையிலாமைக்கழுத்துப்புகுவதுபோற், பொறிவெம்பிறவியநேகத்தாற் புருடன்விவேகியெனப்பிறந்து, முறியும்பிறவிப்பயனிலதிம் மோகமமையுஞ்செய்தொழிலாற், செறிவதென்னேயிவற்றாலே தினங்களெல்லாஞ்சென்றிடுமால்..................... ..... .................... *

(இ-ள்.) எறியுங்கடலின் - அலைகள்வீசுமளக்கரிற்(கிடக்கும்) —நுகத்துளையில்- நுகத்தடியின்(துவாரத்தினுள்)—ஆமைக்கழுத்துப்புகுவதுபோல்- கூர்மத்தின்கண்டநுழைவதுபோல—வெம்பொறி - கொடியவிந்திரியங்களையுடைய—பிறவியநேகத்தால் - அநந்தஞ்சநநத்தில்—புருடன் - ஓர்புருஷினனவன்—விவேகியெனப்பிறந்து - விவேகியாகச்செனித்து—முறியும்பிறவி- கெடாநின்றசநநமானது—பயனிலது- ப்ரயோசனமில்லாதது — இம்மோகமமையும்-இந்தமயக்கம்போதும்—செய்தொழிலால் - செய்யப்பட்டகன்மங்களினால்—செறிவதென்-அடையும்ப்ரயோசனமென்ன—இவற்றால் - இக்கன்மங்களினால்—தினங்களெல்லாம் - நாள்களைத்தும்—சென்றிடும் - (வீணகப்)போகும். எ-று.......................... ......................... ... .........(கூ)

(அ-கை.) இ-து. (கவி) தொழிலின்மிகுதியற்றுயர்ந்து துயர்தீரஃதேதென்றுள்ளே,யழிவிலறுதியுள்ளோனே யடங்கத்திரும்புமவனுகுங், கழிவின்மயல்போய்ப்பவக்கடலைக்கடப்பதெவ்வாறெனவுன்னு,மொழிவில்விசாரத்தால்விரத்தி யுள்ளேயுறுவனுள்வேண்டா..... *

(இ-ள்,) தொழிலின்மிகுதியற்று- கன்மத்தினதுமிகுதிகெட்டு—உயர்ந்து-மேலாகி—துயர்தீர்- துன்பநீங்கும் —அஃதேதென்று- அந்தப்பதமெதுவென்று— உள்ளழிவிலறுதியுள்ளோனே-மனதிலழிவற்றநிச்சயமுள்ளவனே —அடங்க-முழுதும்(விட்டு)—திரும்புமவனுகும் - திரும்பு(நிவர்த்த)னுகும்—கழிவின்மயல்போய்- நீங்காதமயக்கநீங்கி—பவக்கடலை- சநநசமுத்திரத்தை—கடப்பதெவ்வாறெனவுன்னும்-தாண்டுவதெப்படியென்றுநினைக்கின்ற—ஒழிவில்விசாரத்தால்- தவிராதவிசாரணையினால்—நாள்வேண்டா-தினம்வேண்டாமல்—விரத்தியுள்ளேயுறுவன்-துறவுமுகூர்த்தங்களினுலகத்திற்பொருந்துவன். எ-று. (இ-ச-க-ம்) சுவர்க்காதி போகங்களைக்குறித்துக் காமியகருமங்களைச் செய்பவன் ப்ரவிர்த்தனென்றும்நிட்காம புண்ணியபலத்தினாலத்திதீவரனுகபவக்கடலைக் கடக்க நிராசைபிறந்தவ னிவிர்த்தனென்றுங் கூறியதாம் ... .... .... (ய)

(அ-கை.) நிராசையாற்சஞ்சரிக்குநிலையையுரைத்தல் (கவி) உதாரமானதொழில்களின்மேலுயன்றுநாளுமுணமகிழ்வன், கதாவுகின்றகிராமியமாங்கருமச்சழக்கிற்குச்சரிப்பன், விதானகருமங்களைசசெய்வன் விளம்பான்செய்தகருமங்கள், பதாதியுலகோர்வெருவாதபடிமெத்தெனறுதொழிலபுரிவன் ................................ *

(இ-ள்.) உதாரமானதொழில்களில் - மேலாகியகாரியங்களில்—முயன்று - முயற்சித்து—நாளுமுண்மகிழ்வன் - தினந்தோறுமகத்தின் கண்ணானந்தத்தையடைவன் — சுதாவுகின்றகிராமியமாம் - செல்லாநின்றதுச்சமாகிய — கருமச்சழக்கில் - குற்றமுள்ளகன்மங்களில்— அருவருப்பன் - அருவருப்பன்—விதானகருமங்களைச்செய்வன் - உபாயமாகப்புண்ணியகன்மங்களைச் செய்வான்—செய்தகருமங்கள்-தாஞ்செய்தகன்மங்களை—விளம்பான்-(டம்பநிமித்தம்) சொல்லான்—பதாதியுலகோர்-உலகத்திலுள்ளசனங்கள்— வெருவாதபடி - பயப்படாதப்ரகாரம்—மெத்தென்ற-மிருதுவாயிருக்கின்ற—தொழில்புரிவன் - கன்மத்தைச்செய்வான். எ-று.....(௯௧)

(அ-கை.) நிவிர்த்தனே ஞானபூமியின் முதற்பூமியை யடைந்தவனெனல். (கவி)
தீயவினைக்கஞ்சுவனென்றுஞ்செறியும்போகவேட்கையறு, நேயநயமாய்மெத்தென்
றுநிபுணமாகியிடம்பொழுதுக், கேயவுரைகளுரைசெய்வா னிவ்வாறனவிவன்று
னே, யாயபொழுதுமுதற்பூமியானவொன்றையடைந்தவனே ............ ... ..... *

(இ-ள்.) தீயவினைக்கஞ்சுவன் - கொடியதொழிலுக்குப்பயப்படுவான்—என்றும்- எப்போதும்—செறியும் - நெருங்கிய — போகவேட்கையுறான் - போகத்திலாசையைப்பொருந்தான்—நேயநயமாய் - அன்புள்ளவுபசாரமாய்—மெத்தென்று - மிருதுவாய்— நிபுணமாகி- சாமர்த்தியமாய்—இடம்பொழுதுக்கு - தேசகாலங்களுக்கு—ஏயவுரைகள் - பொருந்தினவசனங்களை—உரைசெய்வான் - வசனிப்பான்—இவ்வாறன - இப்படியாயிருக்கின்ற — இவன்றனே - இந்த(நிவிர்த்)தனே—ஆயபொழுது-(இப்படி)யானபோது— முதற்பூமியான - முதற்பூமியென்னுஞ்சுபேச்சையாகிய—ஒன்றையடைந்தவன்-ஒன்றையடைந்தவன். எ-று.....(௯௨)

(அ-கை.) இவனே முதற்பூமியினிலக்கணத்தை விசாரித்தறிந்தவனெனல். (கவி)
ஒக்கமூன்றுகரணத்தாலுயர்நல்லோரைப்பின்செல்வன், மிக்கநன்னூலெங்கணும்
போய்விரும்பிக்கொணர்ந்துபரிசயிப்பன், றொக்கசநநமறுப்பதற்குத்துணிந்திவ்
விசாரம்படைத்தவனே, தக்கபூமியறிந்தோனுந்தருமாரியனுமற்றவனே ............ *

(இ-ள்.) ஒக்கமூன்றுகரணத்தால்- ஒன்றுபடத்திரிகரணங்களினால்—உயர்நல்லோரை- மேலானசத்துக்களை—பின்செல்வன் - அனுசரிப்பான்—மிக்கநன்னூல் - மேலானஞானசாத்திரங்களை—எங்கணும்போய் - எவ்விடத்திலாவதுபோய்— விரும்பிக்கொணர்ந்து - விரும்பித்தருக்கொண்டுவந்து—பரிசயிப்பன் - அற்பியாசஞ்செய்வன்—தொக்கசநநம்- கூடியிருக்கின்ற சம்சாரத்தை—அறுப்பதற்கு - கெடுப்பதற்கு—துணிந்து - நிச்சயித்து—இவ்விசாரம்படைத்தவனே - இந்தவிசாரணையைப்பெற்றவனே—தக்கபூமியறிந்தோனும் - மேலானமுதற்பூமியையறிந்தவனுகும் — மற்றவன் - (இந்நிலையன்றிச்சன்மார்க்கத்திலுள்) ளவன் — தருமாரியனும் - தருந்தமேலானவனும். எ-று. (இ-௯-௧-ம்) வைதீகவிருத்தியின் மகிழ்ச்சியும் லௌகீகவிருத்தியினிந்தையும்—பிரமார்ப்பணமாகப் பண்ணியகன்மங்களைச்செய்தலும் பாவத்துக்குப்பயப்படுதலும் போகமயக்கம்விடுதலுஞ் சாஸ்திரவிசாரமுஞ் சாதுக்கள்சங்கமு முத்திவிருப்பமுமுள்ள நிவிர்த்தனே முதற்பூமியையடைந்தவனென்பதாம் ............................. (௯௩)

(அ-கை.) இரண்டாம்பூமியான விசாரணையை யடைந்தபோதுள்ள விலக்கணங் கூறல்.
(கவி) இருளில்விசாரமெனுநாமத்திரண்டாம்பூமியெய்தினனுஞ், சுருதிமிருதி நல்லொ
ழுக்கந்தொடர்தாரணைநற்றியானங்கண், மருவுகருமங்களைக்கேட்பான் மாசில்விருத்திப்
பொருணிகழ்த்தும், பெருகுபுகழ்சேர்பண்டிதரிற்பெரியோர்தம்மையினிதடைந்து. *

(இ-ள்.) இருளில் - அறியாமையில்லாத—விசாரமெனுநாமத்து - விசாரணையென்கின்ற பெயரையுடைய—இரண்டாம்பூமி - இரண்டாவதுபூமியை—எய்தினனும்- அடைந்தவனுகும்—சுருதி - வேதங்களில்—மிருதி - தருமநூல்களையும்—நல்லொழுக்கம்- நல்லநடைகளையும்—தொடர்தாரணை - தொடராநின்றதாரணையையும்—நற்றியானங்கள் - நல்லதியானங்களையும்—மருவுகருமங்களை - பொருந்தாநின்ற (சற்) கிருத்தியங்களையும்— கேட்பான் - கேட்கும்பொருட்டு—மாசில் - களங்கமற்ற—விருத்திப்பொருணிகழ்த்தும் - வாக்கியார்த்தங்களைப்ரகாசஞ்செய்யும்—பெருகுபுகழ்சேர் - மிகுந்தகீர்த்தியையுடைய—பண்டிதரில்-பண்டிதருக்குள்—பெரியோர்தம்மை - மேலானசத்துக்களை—இனிதடைந்து-இனிமையாகச்சேர்ந்து. எ-று (௯௪)

(அ-கை.) இ-து.(கவி)செறியும்பதார்த்தப்பிரிவறிந்துசெய்யுந்தவிருங்காரியங்க,ளறிவன்
செல்வமானமன்னைக் கடியன்மடமையயறிவதும்போன், மறியுமதமாச்சரியமபிமானமுலோ
பமோகமெலாம், வெறிதுபுறத்தெய்துஞ்சிறிதாய்விடுவன்பாம்புதோல்விடல்போல்.*

(இ-ள்.) செறியும்பதார்த்தப்பிரிவறிந்து - நிறைந்த (நித்தியாநித்திய) வஸ்துவின்விபாகத்தைத்தெரிந்து—செய்யும் - செய்கின்றகாரியங்களையும்—தவிருங்காரியங்கள் - செய்யாதகாரியங்களையும் செல்வமான [illegible] - செல்வமுதலியவிட்டுக்குநாயகனானவன் —[illegible]—

யறிவதுபோல் - கிரககிருத்தியங்களையறிவதுபோல — அறிவன் - அறிவான் — மறியுமதம் - அழிகின்றசெருக்கும் — மாச்சரியம் - பொருமையும் - அபிமானம் - அகங்காரமும் — உலோபம் - ஆசையும் — மோகமெலாம் - மயக்கமுமாகியவனைத்தையும் — வெறிதுபுறத்தெய்தினும் - அறிவின்மையின்வசமாகவந்தாலும் — பாம்புதோல்விடல்போல் - சர்ப்பமானதுசருமத்தை விடுவதுபோல — சிறிதாய்விடுவன் - அற்பமாகநீங்குவன். எ-று. ............................ (௰௫)

(அ-கை.) இ-அ. (கவி) மதியிவ்வாறுள்ளவனூலால்வணங்குகுருவானல்லோரா, லதிகஞ்குய்யப்பொருளனைத்தினறுதியறிவனதற்பின்னர், முதிர்பற்றின்மையெனப்பெயரா மூந்துமற்றைப்பூமிதனைப், புதிதாமலரின்மெல்லணைபோற்பொருந்திநிற்பன்பொலிந்தவனே.... *

(இ-ள்.) மதி - அறிவை — இவ்வாறுள்ளவன் - இவ்வண்ணமுடையவன் — நூலால் - ஞானசாஸ்திரங்களினாலும் — வணங்குகுருவால் - வணங்கத்தக்கவாசாரியராலும் — நல்லோரால் - சத்துக்களாலும் — அதிகம் - அதிதமான — குய்யப்பொருளனைத்தின் - இரகசியமானசர்வார்த்தங்களினது — அறுதியறிவன் - நிச்சயத்தைபுணர்பவனும் — அதற்பின்னர் - அதன்பின்பு — பொலிந்தவன் - விளங்கினவன் — முதிர்பற்றின்மையென - முதிர்ந்தபற்றின்மையென்றுசொல்கின்ற — பெயராம் - நாமத்தையுடையதான — மூந்துமற்றைப்பூமிதனை - மேலாகிய (விந்த) மூன்றும்பூமியை — புதிதாம் - நூதனமாகிய — மலரின்மெல்லணைபோல் - புஷ்பங்களாற்செய்தமிருதுவானவமளி (யிலடைந்திருப்பது) போல — பொருந்திநிற்பன் - சேர்ந்திருப்பான். எ-று. (இ-ங-க-ம்) இங்ஙனங்கூறிய குணங்களனைத்தோடுங் கூடி யாசிரியருபதேச வாக்கியார்த்தங்களினாலும் வேதாந்தமகாவாக்கியார்த்தங்களினாலு மாத்மஸ்வரூப நிச்சயமுண்டாவதே யிரண்டாம்பூமியை யடைந்தவனிலக்கணமென்பதாம்................................ (௰௬)

(அ-கை.) மூன்றும்பூமியானதனுமானசியையடைந்தபோதுள்ளவிலக்கணங்கூறல் (கவி) உள்ளபடியேநூற்பொருளினொழுக்கந்திரமாய்க்கைக்கொண்டு, தள்ளின்முனிவரிடந்தோறுந்தளர்வொன்றில்லாமெய்ஞ்ஞானந், தெள்ளுகதையினொழுங்குகளாற்றீர்க்கவாளுதுகழிப்பன், பள்ளிகொளவுமிருப்பதற்கும்படர்ந்தபாறையிடமாவன்....... ................ *

(இ-ள்.) உள்ளபடியே - உள்ளப்ரகாரமே — நூற்பொருளின் - சாஸ்திரார்த்தங்களின் — ஒழுக்கம் - ஆசாரத்தை — திரமாய்க்கைக்கொண்டு - நிலையாகக்கைவசமாக்கி — தள்ளில் - நீங்காத (பெருமையினையுடைய) — முனிவரிடந்தோறும் - தபசிகளிடங்களெல்லாம் — தளர்வொன்றில்லா - ஒருவாட்டமுமில்லாத — மெய்ஞ்ஞானம் - தத்துவஞானத்தை — தெள்ளுகதையின் - தெளிவாகச் (சொல்கின்ற) கதைகளைக் (கேட்கும்) — ஒழுங்குகளால் - மார்க்கங்களினால் — தீர்க்கவாளுதுகழிப்பன் - நெடியவாயுளைத்தள்ளுவான் — பள்ளிகொளவும் - சயனஞ்செய்வதற்கும் — இருப்பதற்கும் - வாசஞ்செய்வதற்கும் — படர்ந்தபாறை - விசாலமுள்ளபாறைக்கல்லையே — இடமாவன் - ஸ்தானமாகக்கொள்வன். எ-று ........................................ (௰௭)

(அ-கை.) இ-அ. (கவி) பாயுமனமாறியநலத்தாற்பற்றுவின்பஞ்சமமாகித், தோயுமடவிகளிலுலவித் தொக்ககாலஞ் செலவிடுவ, ஆயுநன்னூற்பரிசயத்தா லறங்கள் செயலான்மானிடருக், கேயுமித்தப்பொருளைக்கமிலங்குமுள்ளபடியாக.......... *

(இ-ள்.) பாயுமனம் - தாவாநின்றமனமானது — ஆறியநலத்தால் - அடங்கியிருக்கின்ற நன்மையினால் — பற்றுவின்பம் - ஆசியாதசுகத்தினால் — சமமாகி - சமத்துவமாய் — தோயுமடவிகளிலுலவி - பொருந்தியகானகங்களிற்சஞ்சரித்து — தொக்ககாலம் - நெருங்கியகாலங்களை — செலவிடுவன் - செலுத்துவன் — ஆயுநன்னூற்பரிசயத்தால் - ஆராய்கின்றஞானசாஸ்திரவற்பியாசத்தினாலும் — அறங்கள்செயலால் - புண்ணியகன்மங்களைச்செய்தலினாலும் — மானிடருக்கு - மனிதருக்கு — எயுமித்தப்பொருளைக்கம் - பொருந்தியவிவ்வஸ்துதிருஷ்டியானது — உள்ளபடியாகவிலங்கும் - உள்ளவண்ணம்ப்ரகாசிக்கும். எ-று. (இ-உ-க-ம்.) முன்விசாரணையால்நிச்சயித்தவாத்மஸ்வரூபத்தைப் பரிசீலனஞ்செய் தகத்துறவோடுமனந்தேய்ந்து சாந்தியுற்றிருப்பதே மூன்றாம்பூமியையடைந்தவனிலக்கணமென்பதாம் ........................................ (௰௮)

(அ-கை.) மூன்றும்பூமியானபற்றின்மையை நான்குவிதமாகப் பகுத்துக் கூறல். (கவி) உற்றமூன்றும்பூமியைச்சேர்ந் துணர்ந்தோன்றனேயனுபவிக்கும், பற்றிலாமையிருவகையாம் பகுத்துநாமிங்குரைசெயக்கேண், முற்றுசாமானியமொன்று முதிர்ந்தசேட்டமொன்றாகு, மற்றிவ்விரண்டுமோரொன்றி லிரண்டுவகையாமனுகுலத்தோய் ............ *

(இ-ள்.) உற்ற - பொருந்திய — மூன்றும்பூமியைச்சேர்ந்து - மூன்றும்பூமியையடைந்து — உணர்ந்தோன்றனே - அறிந்தவனே — அனுபவிக்கும் - அனுபவிக்கின்ற — பற்றிலாமை - பற்றில்லாமையானது — இருவகையாம் - இரண்டுவிதமாகும் — நாமிங்கு - யாமிவ்விடத்தில் — பகுத்துரைசெயக்கேள் - பிரித்துச்சொல்லக்கேட்பாய் — முற்றுசாமானியமொன்று - முதிர்ந்தசாமா

ணியமென்பதொன்று— மூநிர்ந்தசேட்டமொன்றும் - முற்றினசிரேட்டமென்பதொன்றும்—மற்றிவ்விரண்டும்- இந்தவிரண்டும்—ஒவ்வொன்றில்- ஒவ்வொன்றில் —மனுகுலத்தேவ்-மனுகுலத்தையுடையஸ்ரீராமா—இரண்டுவகையாம் - இரண்டுவிதமாம். எ-று. (இ-ம்) சாமானியப்பற்றின்மை சேட்டப்பற்றின்மை யென்பதொவ்வொன் றிரண்டாகநான்காமென்பதாம் (௰௯)

(அ-கை.) சாமானியப்பற்றின்மையினிலக்கணங்கூறல். (கவி) பொருள்கடனிற்செய் பவனல்லேன்புசிப்போனல்லேன்றெளிவோனுங், குருவுமல்லேனெப்பற்றிற்குண மாஞ்சாமானியவிரத்திப், பருகுதுன்பமின்பமெலாம்பண்டைவினையால்வருகுமெ ன்றே, யருள்செய்கடவுள்வசந்தானுமமைப்போனுதலெனக்கெங்கே ............... *

(இ-ள்.) பொருள்கடனில்- வஸ்துக்களிடத்தில்—செய்பவனல்லேன்-நான்கர்த்தாவுமல்ல—புசிப்போனல்லேன்- நான்போக்தாவுமல்ல—தெளிவோனும்- தெளிபவனுகியசீஷனும்—குருவும்- (தெரிவிக்கின்ற) வாசிரியரும்—அல்லேனென-நானல்லேனென்று—(சொல்லிய)பற்றிற்குணமாம்- சங்கமற்றகுணமே—சாமானியவிரத்தி- சாமானியவசங்கமாம்— பருகுதுன்பமின்பமெலாம்- புசிக்கப்பட்ட துக்கசுகங்களனைத்தும்—பண்டைவினையால்வரும்-பழையநியதியினுலுண்டாகும்— அன்றே- அப்பொழுதே—அருள்செய்-கிருபைசெய்யாநின்ற — கடவுள்வசந்தானும்- ஈஸ்வராதீனமாம்—அமைப்போனுதல்- கருத்தாவாகுவது—எனக்கெங்கு - எனக்கேது. எ-று. (இ-ம்.) ஒன்றுநாமல்லவென்னும்பற்றின்மையேசாமானியப்பற்றின்மை யென்பதாம் .................................................................................................... (௨௰)

(அ-கை.) சாமானியத்திற்சாமானியப்பற்றின்மையி னிலக்கணங்கூறல். (கவி) கொல்வதானபெருநோயாங் கொடியபோகப்பரப்பெல்லாஞ், செல்வமெல்லாமாபத்துக்கிடமாஞ்செத்தல்பிறப்பதற்கா, மொல்வதான நற்புந்திக் குள்ளகவலைநெடுநோயாஞ், சொல்வனாலமெலாங்காலன் றுலைக்கமுயலும்விடாதென்றே............... *

(இ-ள்.) கொடிய - பொல்லாத — போகப்பரப்பெல்லாம் - போகமிகுதிகளியாவும்—கொல்வதான-கொல்லுவதாகிய—பெருநோயாம்-பெருவியாதியாகும்—செல்வமெல்லாம்-சம்பத்துக்களனைத்தும்—ஆபத்துக்கிடமாம் - ஆபத்துக்குஸ்தானமாகும்—செத்தல்-இறத்தல்—பிறப்பதற்காம்- செனிப்பதற்கேயாகும்—ஒல்வதானநற்புந்திக்கு - குழைதலாகியநல்லபுத்திக்கு—உள்ளகவலை-உண்டானதுன்பமே—நெடுநோயாம்- நீண்டவியாதியாம்—சொல்வனாலமெலாங்காலன்றுலைக்க - கூறுஞ்சகங்களனைத்தையுமியமன்கெடுக்க—விடாதுமுயலும்-விடாமன் முயற்சிப்பன். எ-று ........................................................................................................(௨௧)

(அ-கை.) இ-து. (கவி) பண்டமனைத்தின்பற்றற்ற பகர்பாவனையுள்ளுறவுண்டாங்,கொண்டவுயர்வாக்கியப்பொருளைக்குறிப்பாலழுந்துமனத்தோர்க்குக்; கண்டவிதுசாமானியமாங்கவர்பற்றில்லாவிந்நெறியா, லண்டுபெரியோர்கூட்டரவாலறிவிலாதோர் நீக்கத்தால்.... *

(இ-ள்.) பண்டமனைத்தின் - வஸ்துக்களிலெல்லாம்— பற்றற்ற - இச்சையற்ற—பகர்பாவனை- சொல்லப்பட்டபாவனையானது—உள்ளுறவுண்டாம்- உள்ளத்தின்கண்பொருந்தவுண்டாகும்—கொண்டவுயர்வாக்கியப்பொருளை-கிரகித்தமகாவாக்கியார்த்தத்தை—குறிப்பாலழுந்தும்- உரிமையாகவழுந்துகின்ற—மனத்தோர்க்கு- மனதையுடையவர்களுக்கு—கண்டவிதுசாமானியமாம்- காணப்பெற்றவிதுவேசாமானியபற்றின்மையாம்— கவர்பற்றில்லா - கிரகிக்கின்றவாசையில்லாத—இந்நெறியால் - இவ்வழியினுலும்—அண்டுபெரியோர்கூட்டரவால்-அடையத்தக்கசத்துக்களினது சங்கத்தினுலும்— அறிவிலாதோர்நீக்கத்தால் - மூடர்களுடையநிவிர்த்தியினுலும். எ-று. (இ-உ-க-ம்) கருமத்தினுலு மீஸ்வரனுலும் வருகின்றசுகதுக்கங்களி னமக்குவிருப்புவெறுப்பென்ன வென்றவைகளிற் பற்றற்றவனுய் முன்விசாரித்த வேதாந்த மகாவாக்கியார்த்தநிச்சயத்தழுந்துவதே சாமானியத்திற் சாமானியப்பற்றின்மையென்பதாம்.......... (௨௨)

(அ-கை.) சேட்டப்பற்றின்மையி னிலக்கணங்கூறல். (கவி) தானுமுணர்வினுட்டெளிவாற் றக்கபுருடவருத்தத்தா, லானுநன்னூற்பரிசயத்தாலங்கைநெல்லிதோன்றுதல்போ, லூனூர்பிறவிப்பெருங்கடலினுயர்காரணமாம்பெரியகளா, தேனூலரங்கன்மணிமார்பா தெளியக்காண்கின்றனதிடமாய்.... ............................................ *

(இ-ள்.) தானுமுணர்வின் - சுயஞ்ஞைதன்யத்தை—உட்டெளிவால்- அகத்திற்றெளிந்ததெளிவினுலும்—தக்கபுருடவருத்தத்தால் - மேலாகியபுருஷப்ரயத்தினத்தினுலும்— ஆனுநன்னூல்- நீங்காதஞானசாஸ்த்திரத்தின்—பரிசயத்தால் - அப்பியாசத்தினுலும்— அங்கைநெல்லி-கரதலாமலகம்—தோன்றுதல்போல்-தோற்றப்படுவதுபோல—ஊனூர்பிறவிப்பெருங்கடலில்-மாமிசநிறைந்தசநநமென்னும்மகோததியினுடைய—உயர்காரணமாம்பெரியகளா-மேலானகாரணமாயிருக்கின்றமகாதிரமானது—தேனூலலங்கல்-மதுக்கணிறைந்தபுஷ்பமாலையும்—மணி-

இரத்தின(மாலையும்விளங்குகின்ற)—மார்பா- மார்பையுடையஸ்ரீராமா—திடமாம்- உறுதியாய் —தெரியக்காண்கின்ற - ஸ்புடமாய்ப்பார்க்கின்றன. எ-று ............................................ (உ௩)

(அ-கை.) இ-து. (கவி) செய்வானுனன்றீசன்றான் செய்வானலதென்பழவினைதா, னிவ்வாறுனசொற்பொருளிணெண்ணமெல்லாநிச்சயமாய்க், கவ்வாததிதூரத்தகற்றிக்கலந்தசாந்தமோனநிலை,பெய்வான்கருணைமுகிலேமுன் பேசுசேட்டப்பற்றின்மை...................... *

(இ-ள்.) நான்-யான்—செய்வானன்று- கருத்தாவல்ல—ஈசன்றான்செய்வான்-ஈசனேகருத்தா —அலது-அல்லாமல்—என்பழவினைதான்- என்னூழே(கருத்தா)வென்கின்ற—இவ்வாறு-இவ்வண்ணமாகிய—சொற்பொருளின் - வசனார்த்தங்களின்—எண்ணமெல்லாம்- சங்கற்பங்களனைத்தும்—நிச்சயமாய் - உண்மையாக—கவ்வாததிதூரத்தகற்றி- பற்றாமல்வெகுதூரத்திற்றள்ளி—கலந்தசாந்தம்- சேர்ந்தசாந்தமாகிய—மோனநிலை- மௌனநிச்சயம்—பெய்-(அருளைப்)பொழிகின்ற—வான்கருணைமுகிலே - மேலானகிருபாமேகமே — முன்பேசுசேட்டப்பற்றின்மை- முன்சொல்லியசேட்டப்பற்றின்மை. எ-று. (இ-உ-க-ம்) முன்னுத்ம நிச்சயத்திலழுந்தினபடியேயவ்வித்தை யனுபவமாய்த் தரிசித்தற்சேட்டப் பற்றின்மை யென்பதாம் .............. (உ௪)

(அ-கை.) சேட்டத்திற்சேட்டப்பற்றின்மையி னிலக்கணங்கூறல். (கவி) அகத்திற்புறத்தின்மேல்கீழி லாசைகளிலாகாயத்திற், சகத்திற்பொருளிற்பொருளல்லா தவற்றிற்சடத்திற்றனியறிவிற், பகுத்துக்கருதாதுபசாந்தம் பயின்றுநினைவற்றொளியற்று, மிகுத்துப்பிறப்பற்றடிமுடிவின் மேன்மைசேட்டப்பற்றின்மை...................... *

(இ-ள்.) அகத்திற்புறத்தில்- உள்ளிலும்புறம்பிலும்—மேல்கீழில்-மேலிலுங்கீழிலும்—ஆசைகளில்- திசைகளிலும்—ஆகாயத்தில்—விண்ணிலும்—சகத்தில்- உலகத்திலுமுள்ள—பொருளில்- வஸ்துக்களிலும்—பொருளல்லாதவற்றில் - வஸ்துக்களல்லாதவற்றிலும்—சடத்திற்றனியறிவில்- சடசித்துக்களிலும்—பகுத்துக்கருதாது-பிரித்துநினையாமல்—உபசாந்தம்பயின்று-உபசாந்தத்திற்கூடி—நினைவற்று - எண்ணமிறந்து—ஒளியற்று- ப்ரகாசமிறந்து—மிகுந்தபிறப்பற்று- அளவற்றசநநமழிந்து—அடிமுடிவில் - ஆதியந்தமில்லாததே—மேன்மை-மேலாகிய—சேட்டப்பற்றின்மை- சேட்டப்பற்றின்மையாம். எ-று. (இ-ம்) உபசாந்ததிருஷ்டியுள்ளவனும்முன்றரிசனமான வாத்மாவின் மனங்களாந்திருப்பதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மையென்பதாம்...................................................... (உரு)

(அ-கை.) சேட்டப்பற்றினமையே மூன்றாம்பூமியின் பலமாமெனல். (கவி) மகிழ்வாம்வாசமதுரமுடன் வருநற்றொழிலாந்தளிர்மேவித், தகவாமனத்தாணுனிசேர்ந்துதடையாமுள்ளுநிறைந்தறிவா,மிகுமோர்கமலமடைந்துட்சேர்விவேகவிரவியான்மலர்ந்து, பகர்மூன்றாமிப்பூமிதனைப் பலமாய்ப்பலிக்கும்பற்றின்மை .......... *

(இ-ள்.) மகிழ்வாம் - களிப்பாகிய—வாசமதுரமுடன்வரும்- வாசனையுந்தித்திப்போடும்வராநின்ற—நற்றொழிலாம்-சற்கிருத்தியமான—தளிர்மேவி-துளிரையடைந்து—தகவாமனத்தாள்- தெளிவுள்ளமனமென்னுந்தண்டினது—நுனிசேர்ந்து-நுனையையடைந்து—தடையாமுள்ளுநிறைந்து—விக்கினமாகின்றமுட்களிறைந்திருக்கின்ற—அறிவாம்-ஞானமாகிய—மிகுமோர்கமலம்-மேலானவொப்பற்றதாமரையரும்பானது--அடைந்துட்சேர்-பொருந்தவுள்ளத்தின்கண்சார்ந்திருக்கின்ற—விவேகவிரவியால்-விவேகமென்னுஞ்சூரியனால்—மலர்ந்து-விகசிதமாய்—பகர்மூன்றாம்பூமிதனை-சொல்லப்பட்டவித்தனுமாநசியென்கின்றமூன்றாம்பூமியை—பற்றின்மை-சேட்டப்பற்றின்மையானது--பலமாய்ப்பலிக்கும்-ப்ரயோசனமாகக்கொடுக்கும்

(அ-கை.) முதற்பூமியின்விசேடந்தோன்றக்கூறுதல்,(கவி)மோகமில்லாதவர்செறிவான் முதுநல்லறத்தின்சமுகத்தாற், காகதாலீயம்போலக்கருத்திலுதிக்குமுதலான, யோகபூமியுதித்தலுமே யுள்ளேயமுதமுளையொப்பா, மேகவிவேகநீர்பாச்சியிதுகாத்தளிக்கப்படுமுயன்றே...................................................... *

(இ-ள்.) மோகமில்லாதவர் - மயக்கமற்றசத்துக்களது—செறிவால் - சங்கத்தினாலும்—முதுநல்லறத்தின் - முதிர்ந்தநிட்காமதருமத்தின்—சமுகத்தால்-சங்கத்தினாலும்—காகதாலீயம்போல-காகதாலியநியாயத்தைப்போல—முதலானயோகபூமி-சுபேச்சை(யென்னு)முதன்மையாகியஞானபூமியானது—கருத்திலுதிக்கும்- மனதிலுண்டாகும்—உள்ளேயமுதமுளையொப்பாம்-அகத்திலமுதாங்குரத்துக்கிணையாக—உதித்தலும்-உதயமாகவும்—ஏகவிவேகம்-ஒன்றானவிவேகமாகிய—நீர்ப்பாச்சி- சலத்தைப்பாச்சி—முயன்று- முயற்சிசெய்து—இதுகாத்தளிக்கப்படும்-இதைக்காத்திரட்சிக்கப்படும். எ-று...................................................... (உ௭)

(அ-கை.) இ-து. (கவி) விடுதியாலேதழைக்குமிது விசாரத்தாலவ்விடுதிதனை, வடுவிலுழவர்செந்நெல்முளைபோல் வருந்திவளர்க்கநாடோறு, மொடிவின்மறுபூமிக்கிந்த வொன்றேசுநபூமியென, முடிவில்வெளியாமதிலிரண்டா மூன்றும்பூமிதனைப்பெறலாம் ......... ..*

(இ-ள்.) விடுதியால்- பற்றின்மையினால்—இது தழைக்கும்- இந்த(முதற்பூமியானது)ஒன்றும்—விசாரத்தால்- விசாரணையினால் —அவ்விடுதிதனை - அப்பற்றின்மையை— வடுவில்- களங்கமற்ற—உழவர்செந்நெல்முளைபோல்- பள்ளர்கள் டங்கள்பூமியி)னெல்முளையை(வளர்ப்பது)போல —நாடோறும் - தினந்தோறும்— வருந்திவளர்க்க - வருத்தப்பட்டுவளரச்செய்ய — ஒடிவில்- கேடுதலில்லாத—மறுபூமிக்கு - அடுத்தபூமிகளுக்கு—இந்தவொன்றே- இம்(முதற்பூமியான)தொன்றுமே—சுநபூமியென - உண்டாகும்பூமியாக—முடிவில் - அந்தத்தில்—வெளியாம்- வெளிப்படும்—அதில்- அதினின்றும்—இரண்டாம்-இரண்டாம்(பூமியாகியவிசாரணையையும்) —மூன்றும்பூமிதனை - (தனுமானசியாகிய)மூன்றாம்பூமியையும்— பெறலாம் - அடையலாகும். எ-று. (இ-உ-க-ம்) சாதுசங்கதிஷ்காமபதம் வித்தாகவுண்டான சுபேச்சையென்னுமாத்மாங்குரத்தை விவேகவிசாரமான சலத்தைப்பூரித்து முயற்சியாற் காக்கின் பற்றின்மையானதனுமானசியினாற் றழைக்குமாதலி னம்முதற்பூமியே காரணமாமென்பதாம் ......... .... (௨௮)

(அ-கை.) ஞானபூமியினிலக்கணங்கேட்ட விராமன்மூடர்முதலியோர்க் கிம்மூன்றுபூமியுண்டாதலு மிதுவிறந்தவன் கதியுமியாதென வினவுதல். (கவி) சேட்டமெனச்சொல்பற்றின்மை சேர்ந்தான்மூன்றும்பூமியதா, மீட்டுபுருடன் சங்கற்பமென்ன மொன்றுமில்லென்னக், கேட்டகுமரனுரைசெய்வான் கீழாங்குலத்தோனுணர்வில்லோன், பூட்டுதொழிலோன்பொல்லாதோன் புகன்றயோகமில்லாதோன்..... .......*

(இ-ள்.) சேட்டமெனச்சொல்- சேட்டமென்றுசொல்லுகின்ற—பற்றின்மைசேர்ந்தால்-பற்றின்மையையடைந்தால்—மூன்றும்பூமியதாம் - (அதுவே)மூன்றும்பூமியாகும்— ஈட்டுபுருடன்- இதைச்சம்பாதிக்கின்றபுருஷன்—சங்கற்பமென்மென்றும் - ஒருசங்கற்பநினைவும்— இல்லென்ன- இல்லாதவனென்று(வசிஷ்டமுனி)சொல்ல—கேட்டகுமரனுரைசெய்வான்-கேள்வியுற்றஸ்ரீராமனவர்சொல்லுவார்— கீழாங்குலத்தோன் - இழிவானகுலத்தையுடையவனும் —உணர்வில்லோன்- அறிவில்லாதவனும்— பூட்டுதொழிலோன் - பந்தத்தொழிலையுடையவனும்—பொல்லாதோன் - பொல்லாதவனும் — புகன்றயோகமில்லாதோன் - சொல்லப்பட்டஞானமில்லாதவனும். எ - று........ ........................................(௨௯)

(அ-கை.) இ-து. (கவி) அவனுக்கெங்ஙனேயுண்டா மறைந்தநன்மையிதுநிற்க,விவணமுயர்பூமியிலொன்றையிரண்டைமூன்றும்வேறொன்றைக், கவர்வுற்றடைந்தோனுயிர்மாய்ந்தாற் கலந்துமேவுங்கதியேது, தவறிற்பெரியோயுரையென்ன சான்றவசிட்டனுரைசெய்வான் ....... ............ ............. ..............................*

(இ-ள்.) அவனுக்கு- அக்குணமுள்ளவர்களுக்கு—அறைந்தநன்மை - சொல்லப்பட்டமுத்தியானது—எங்ஙனேயுண்டாம் - எப்படியுண்டாகும்—இதுநிற்க-இதுவிருக்க—இவணம்- இந்தப்ரகாரம்—உயர்பூமியில் - மேலானஞானபூமிகளில்—ஒன்றை- முதற்பூமியையாவது— இரண்டை - இரண்டாம்பூமியையாவது—மூன்றும்வேறொன்றை - மற்றமூன்றாம்பூமியையாவது—கவர்வுற்றடைந்தோன்- வருத்தப்பட்டடைந்தவனது—உயிர்மாய்ந்தால்-சீவன்பிரிந்தால்—கலந்துமேவும் - சேர்ந்தடைகின்ற—கதியேது - கதியென்ன—தவறிற்பெரியோய்- குற்றமற்றமகானே—உரையென்ன - சொல்லுமென்றுகேட்க—சான்ற - அறிஞராகிய—வசிட்டனுரைசெய்வான்- வசிஷ்டமுனிசொல்லுவார். எ-று.(இ-உ-க-ம்) இராமன்வினவுக் குத்தரஞ்சொல்லத்தொடங்கினதாம் .......... ............................................................(௩௰)

(அ-கை.) முதல்வினாவினுக்கிரண்டுவிதமாகவுத்தரங்கூறல். (கவி) மூடனாகிப்பலகுற்றமூடுமவனுக்கநேகமென, நீபபிறப்பாமுதற்பூமிநேருமட்டும்பிறப்பகலா, நாப்பினுவன்றியிற்காகதாலீயம்போலவலநெறி, கூடும்மன்னுமதனூலே குறைவின்மாசையதுபிறக்கும்..*

(இ-ள்.) மூடனாகி- மூடனாய்—பலகுற்றம்-அநேகம்பிழைகள்—மூடுமவனுக்கு-சூழுகின்றவனுக்கு—அநேகமென - பலவிதமாகச்சொல்லப்பட்ட—நீபபிறப்பாம் - அநேகசனநமுண்டாகும்—முதற்பூமி- முதன்மையானபூமியானது—நேருமட்டும் - கிடைக்குமட்டுந்தம்—

பிறப்பகலா - சநநநீங்காது—நாடுமிதுவன்றியில் - தேடுகின்றவிதுவல்லாமல்—காகதாலீயம் போல்- காகதாலியநியாயத்தைப்போல— நல்லநெறிகூடுமெனினும்- சன்மார்க்கங்கூடினாலும் —அதனால் - அதனால்—குறைவினிராசையது - குறைவில்லாதநிராசையானது — பிறக்கும்- உண்டாகும். எ-று ........................................................................................ (௫௧)

(அ-கை.) இ-து. (கலி) அன்றிநல்லோர்கூட்டரவாலடுத்தவிராகமதுபிறக்கு, மொன்றுநி ராசையுறுபோதே யோகபூமியுறற்றப்பா, துன்றுமதனாற்பிறப்பகலுந் தொகுநூற்பொ ருளின்சுருக்கமிதா, நின்றயோகபூமியுட னிதனமடைந்தோர்நெறிகேளாய் ............... *

(இ-ள்.) அன்றி - அல்லாமல்—நல்லோர்கூட்டர்வால் - சாதுக்கள்சங்கத்தினால்— அடுத்த விராகமது - சேர்ந்தநிராசையானது—பிறக்கும் - உண்டாகும்—ஒன்றுநிராசை- பொருந்தா நின்றநிராசையானது—உறுபோதே - அடைந்தபொழுதே—யோகபூமி - ஞானபூமியானது —உறல்தப்பா - அடைதல்தப்பாது—துன்றுமதனால் - நிறைந்தவந்த (ஞானபூமியி) னால்— பிறப்பகலும் - சநநநீங்கும்—தொகுநூற்பொருளின் - தொகுத்தசாஸ்திரார்த்தத்தின்—சுரு க்கமிதாம் - முடிவிதுவாகும்— நின்றயோகபூமியுடன் - (இவ) னிருந்தஞானபூமியோடும்— நிதனமடைந்தோர்-மரணமடைந்தவர்களின்—நெறிகேளாய்-மார்க்கத்தைக்கேட்பாய். எ-று. (இ-உ-க-ம்) முதற்பூமிகிடையாத மூடனுக்குப் பவநீங்காதென்று மவனுக்குத் தெய்வீகமா யிச் சற்கிருத்தியமுண்டா யதனா னிராசையுண்டா யதனாற் சாதுசங்கமுண்டா யதனான் விராக ம்பெறி னதனா லிப்பூமி தவறாமல் வருமதனாற் பவநீங்குமென்பது சாஸ்திரார்த்த சங்கிரக மென்றுந் தெரிவித்ததாம் ........................................................................................ (௫௨)

(அ-கை.) இரண்டாம்வினாவுக் குத்தரங்கூறல். (கலி) யோகபூமியம்சம்விடாதுற லாற்பழையதீவினைபோ, மாகவிமானமதற்பின்பு வந்துகொடுபோய்வானவர்வாழ், நாகமுதலாமுயர்பதியினன்மேருவின்சூழ்பொழின்முழையிற், போகமடவாரொ டுங்கூடிப்புணர்ந்துசிந்தைகளிகூர்வன் ........................................................................................ *

(இ-ள்.) யோகபூமி - (ஞானபூமி) மூன்றின்— அம்சம்விடாதுறலால் - அம்சம்விடா மலடைதலினால்—பழையதீவினைபோம் - முன்னுள்ளதீவினைகெடும் — அதற்பின்பு - அதன் பின்பு—மாகவிமானம்வந்து-தெய்வவிமானத்தைக்கொண்டுவந்து—கொடுபோய்- (இவனைக்) கொண்டுபோய்—வானவர்வாழ் - தேவர்கள்வாழாநின்ற — நாகமுதலாம் - தெய்வலோகமுத லாகிய—உயர்பதியின்- மேலானவிடங்களிலும்—நன்மேருவின்சூழ்பொழின்முழையில்-நல்ல மேருவிலுஞ்சூழ்ந்தசோலைகளிலுங்குகைகளிலும்— போகமடவாரொடும் - போகமாதர்களு டன்—கூடிப்புணர்ந்துசிந்தைகளிகூர்வன் - சேர்ந்துமனங்களிப்பன். எ-று..................... (௫௫)

(அ-கை.) இ-து. (கலி) அருந்துபோகமாய்தலினாலளவில்பண்டையிருவினையும், பொ ருந்தமாயுமப்போதுபுவியிற்பிறப்பர்யோகிகளாய், திருந்துசெல்வங்குணஞ்சுத்தஞ்சிறந் தநல்லோர்மனைப்பிறந்து, வருந்திமுன்னம்பழகுதலால்வழுவாயோகநெறிநிற்பர்..... *

(இ-ள்.) அருந்துபோகமாய்தலினால்-புசிக்கப்பட்டபோகநசிப்பதினால்—அளவில் - அள வில்லாத—பண்டையிருவினையும் - பழையவிரண்டுவினைகளும்— பொருந்தமாயும் - ஒருங்கே கெடும்—அப்போது - அப்பொழுதே—யோகிகளாய் - ஞானிகளாய்—புவியிற்பிறப்பர்- பூமி யிற்செனிப்பார்கள்—திருந்துசெல்வம் - திருத்தமானசம்பத்தும்— குணம் - சற்குணமும்— சுத்தம் - பரிசுத்தமும்—சிறந்த - சிறப்புற்றிருக்கின்ற—நல்லோர் - சத்துக்களினது— மனை ப்பிறந்து - வீட்டிற்செனித்து—முன்னம்வருந்தி - முன்புவருந்தப்பட்டு—பழகுதலால்- அற் பியாசஞ்செய்தலினால்--வழுவாயோகநெறிநிற்பர்-தவறாமன்ஞானமார்க்கத்திலிருப்பார்.எ-று (இ-உ-க-ம்) மூன்றுமூன்று பூமியினற்பியாசத்தினுள் ளெங்ஙனமரித்தான்மீளவுமுநித்தவ்விட்ட குறையானவங்ஙனநின்றற்பியாசித்து முத்தியையடைவனென்பதாம்........................... (௫௪)

(அ-கை.) ஞானபூமியேழையு மஞ்சவத்தையாகச்சொல்லத்தொடங்கி யிம்மூன்று பூமி யற்பியாசத்திற் சகனுசாமானியமாகத் தோற்றுமாதலாற் சாக்கிராவவத்தை யெனவு மம்மைதையடைந்தவனிலக்கணமுங்கூறுதல். (கலி) விதமாஞ்சகத்தைச்சாக் கிரத்தின்மிகப்போதந்தீர்புந்தியினாற், பொதுவாய்நோக்குமதனாலிப்பூமிமூன்று ஞ்சாக்கிரமா, மதுவேதனிக்கேவலமியோகிக்காரியப்பேர்பெறுதிறமா, மிதனாலி வனேயுய்ந்தவனென்றேத்தத்தோன்றுமறிவிலர்க்கும்........................................ *

(இ-ள்.) விசாலஞ்சகத்தை - நாநாவிதமாயுள்ளவுலகத்தை—சாக்கிரத்தில் - நனவில்—மிகப்போதத்தின் - மிகவும் புத்தியில்லாத—புத்தியினால் - புத்தியினால்— பொதுவாய்நோக்குமதனால்—சாதாரணமாகப்பார்க்கின்றவதனால்—இப்பூமிமூன்றும் - இந்தமூன்றுபூமியும்—சாக்கிரமாம் - நனவேயாகும்—அதுவே - அந்தப்பூமியே—தனிக்கேவலம் - தனிக்கேவலமாகிய—யோகிக்கு - ஞானிக்கு—ஆரியப்பேர்பெறும் - ஆசாரியனென்னுநாமமுண்டாகும் — திறமையதனால் - காரணமானவிந்த (வாசாரியநாமத்தி) னால் — இவனுய்ந்தவனென்று - இவன் மோக்ஷமடைந்தவனென்று — அறிவிலர்க்கும் - அஞ்ஞானிகளுக்கும் — எந்தத்தோன்றும் - (மோக்ஷவிச்சையுண்டாகி) த்தோத்திரஞ்செய்பத்தோற்றும். எ-று.......... ..................... (௬௫)

(அ-கை.) இ - ஆ. (கவி) செயலினுரியமிகச்செய்வோன் செய்யத்தகாதசெய்யாதோ, னியல்பினொழுக்கத்தனினிற்போனியாவனவனேயாரியனு, முயலுமொழுக்கநூற்சித்தமுந்துநிலைவிகாரம், புயலினிறத்தோயுள்ளபடிபொருந்துமவனேயாரியனும்........ *

(இ-ள்.) செயலினுரிய - செய்வதற்குரித்தான(தொழிலை)—மிகச்செய்வோன் - மிகவுஞ் செய்பவன்—செய்யத்தகாத - செய்யத்தகாத (காரியங்களை)—செய்யாதோன் - செய்யாதவன்—இயல்பினொழுக்கந்தனில் - இயல்பினையுடையமார்க்கத்தில்—நிற்போனியாவன் - இருப்பவனெவனோ—அவனேயாரியனும் - அவனேயுயர்ந்தோனுகும்—முயலுமொழுக்கம் - முயற்சிக்கின்றவாசாரத்திலும்—நூற்சித்தம் - சாஸ்திரவபிப்ராயத்திலும்—முந்து - முதன்மையான—நிலைமைவிகாரம் - நிச்சயவிகாரத்திலும்—புயலினிறத்தோய் - மேகவண்ணனான ஸ்ரீராமா—உள்ளபடி - உள்ளப்ரகாரம்—பொருந்துமவனேயாரியனும் - அமையுமவனேயுயர்ந்தவனாகும். எ-று.

(அ-கை.) மூன்றுபூமியிலுதிக்கும்பயனைக்கூறுதல். (கவி) முதலாமியோகபூமியிலேமுளைக்குமிரண்டாவதின்மலருந், தழையுமூன்றாவதிற்பலிக்குந் தனியாரியனுந்திறமியோகி, யிதனிலிறந்தானெடுங்காலமிருந்துசுத்தசங்கற்பத்துதவுபோகங்களையருந்தியோகியாய்மீண்டுற்பவிப்பான் ....... ........ ...................................... ........... *

(இ-ள்.) முதலாமியோகபூமியில் - முதலானஞானபூமியில்—முளைக்கும் - உண்டாகும்—இரண்டாவதின்மலரும் - இரண்டாம்பூமியில்விகசிதமாகும்— தழையமூன்றாவதில் - நெருங்கியமூன்றாம்பூமியில்—தனியாரியனும் - ஒப்பற்றவாசிரியனான—திறம்பலிக்கும் - தன்மைபலிக்கும்—இயோகி - ஞானியானவன்—இதனிலிறந்தால் - இந்த (ப்பூமிகளினிற்கும்போதின்) மரித்தால்—நெடுங்காலமிருந்து - அநேககாலஞ் (சுவர்க்கத்தி) லிருந்து— சுத்தசங்கற்பத்து - சுத்தசங்கற்பத்தினால்—உதவுபோகங்களையருந்தி - கொடாநின்றபோகங்களைப்புசித்து—யோகியாய்மீண்டுற்பவிப்பன் - ஞானியாய்த்திரும்பச்செனிப்பன். எ-று .................................. (௬௭)

(அ-கை.) மூன்றுபூமியினற்பியாசத்தாலஞ்ஞானநீங்கிஞானமுதிக்குமெனல் (கவி) மூன்றுபூமிப்பரிசயத்தால்மூடத்தன்மையிறந்தழியே, யான்றஞானேதயமுண்டாயாதியந்தமறவிரிந்து, பூன்றமதியினுதயம்போற்பொலியுமனத்திற்போதமுற, வூன்றுயோகத்துடன்சேர்ந்தவுள்ளமுடையயோகிக்கே..................... ..... .................... *

(இ-ள்.) மூன்றுபூமிப்பரிசயத்தால் - மூன்றுபூமியின்றப்பியாசத்தினால்— மூடத்தன்மையிறந்தழி - அறிவின்மையானதிறந்தமாத்திரத்தில்—ஆன்றஞானேதயமுண்டாய் - மாக்ஷிமையானஞானமுதித்து —ஆதியந்தமறவிரிந்து - ஆதியந்தமில்லாமல்வியாபகமாய் — பூன்றமதியினுதயம்போல் - பூர்ணசந்திரோதயம்போல— மனத்தில் - மனதில்—போதமுற - ஞானமடைய —ஊன்றுயோகத்துடன் - திரமாகியஞானத்தோடும்—சேர்ந்தவுள்ளமுடைய - சேர்ந்தமனதையுடைய—யோகிக்கு - ஞானிகளுக்கு—பொலியும் - விளங்கும். எ-று (இ-ச-க-ம்) இம்மூன்றுபூமியினவத்தையுமதையடைந்தவன்றிறமுமதனுன்ஞானமுதிப்பதுங் கூறியதாம்.

(அ-கை.) நான்காவதானசத்துவாபத்திசொற்பனவத்தையெனல் (கவி) சமமதாகச்சொற்பனம்போற்சகத்திலனைத்துநோக்கிடுவ, ரமரநாலாம்பூமிதனையடைந்தோர்முதற்பூமிகண்மூன்றுங், குமரனேசாக்கிரமாகுங்கூறுநாலாவதுகனவாம், விமலசித்தஞ்சரற்காலமேகசாலம்போலிறக்கும் ........................................................ *

(இ-ள்.) நாலாம்பூமிதனை - நான்காவதுபூமியை—அடைந்தோர் - அடைந்தவர்கள்—சமமதாக - சமத்துவமாக—சொற்பனம்போல் - கனவைப்போல—சகத்திலனைத்தும் - உலக

த்தின்கண்சகலத்தையும்—அமரநோக்கிடுவர்- அமரப்பார்ப்பார்கள்--மூதற்பூமிகண்மூன்றும் மூதன்மையானமூன்றுபூமிகளும்—குமரனே - ஸ்ரீராமா—சாக்கிரமாகும் - சாக்கிரவவத்தையாம்—கூறுநாலாவதுகனவாம் - சொல்லப்பட்டநான்காம்பூமியானது சொற்பனவவத்தையாகும்—விமலசித்தம் - நின்மலமனமானது—சரற்காலம் - சரற்காலத்துண்டான—மேகசாலம்போல் - மூகிற்கூட்டங்களைப்போல—இறக்கும் - நசிக்கும். எ-று. (இ-ம்) முன்மூன்று பூமியினற்பியாசத்தினுன் ஞானமூதயமாயதனுற் சகஞ்சொற்பனம்போலத் தோற்றுதலினிப் பூமி சொற்பனவவத்தையென்பதாம் ........................................ (௫௯)

(அ-கை.) ஐந்தாவதானவசம்சத்திசுழுத்தியவத்தையெனல். (கவி) சிறக்குஞ்சற்பாவந்தானே சேடமாகநின்றிடுவர், பறக்குஞ்சித்தமிறத்தலினற் படர்ந்தவிகற்பமெலாந்தோன்று, வுறக்குஞ்சுழுத்திப்பதமென்ன வுரைக்குமைந்தாம்பூமியிற்போய், நிறக்கும்விசேடமனைத்துமற நிற்பனென்றுநிலைமட்டில் ........................ *

(இ-ள்.) சிறக்குஞ்சற்பாவந்தான் - விசேஷமானசற்பாவமே— சேடமாகநின்றிடுவர்- மிஞ்சின்தென்றிருப்பார்கள் — பறக்குஞ்சித்தம் - வேகமுள்ளமனமானது — இறத்தலினுல்- மரித்ததினுல்— படர்ந்தவிகற்பமெலாந்தோன்று - விரிந்தவிகற்பங்களனைத்துமுண்டாகாது— உறக்கும்-நித்திரைசெய்யும்— சுழுத்திப்பதமென்ன - சுழுத்தியவத்தையென்று — உரைக்கும்- சொல்லப்பட்ட—ஐந்தாம்பூமியிற்போய் - ஐந்தாம்பூமியிற்சென்று—நிறக்கும்- குணமான— விசேடமனைத்துமற- விசேஷங்களெல்லாங்கெடும்படி—ஒன்றுநிலைமட்டில் - அத்துவிதநிசசயமாத்திரத்தில்—நிற்பன் - இருப்பன். எ-று ........................................ (௬௰)

(அ-கை.) இ-து. (கவி) இருமையென்னுமிருள்போயுள் ளெறியாநின்றபேருணர்வோ, னருமையானசுழுத்திநிலை யாகிநிற்பனனவரதம், பொருவிலுண்ணேக்குடனிற்பன் புறத்திற்றொழிலிற்புரிந்தேயு,மொருமையுபசாந்தத்தாலேயுறக்கமிகுந்தோன்போற்றெரிவன்.

(இ-ள்.) இருமையென்னுமிருள்போய் - துவிதமென்கின்றவந்தகாரமானது நீங்கி— உள்ளெறியாநின்ற- உள்ளத்தின்கண்ப்ரகாசிக்கின்ற—பேருணர்வோன்- பூரணஞானமுடையவன்— அருமையானசுழுத்திநிலையாகி - அருமையாகியசுழுத்திநிலையையுடையவனாய்— அனவரதநிற்பன்- எப்பொழுதுமிருப்பன்—பொருவில்- ஒப்பில்லாத—உண்ணேக்குடனிற்பன்-அந்தர்முகத்திலிருப்பன் — புறத்தில் - பகிர்முகத்தில் — தொழிலிற்புரிந்தேயும் - கிரிகைகளைச்செய்தாலும்—ஒருமையுபசாந்தத்தால் - ஏகமானவுபசாந்தத்தினுல்—உறக்கமிகுத்தோன்போல் - நித்திரையதிகரித்தவனைப்போல—தெரிவன் - காணப்படுவன். எ-று. (இ-உ-க-ம்) முன்பூமியினுதித்த ஞானத்தினுன் மனேநாசமாய்ச் சுழுத்தியவத்தையைப்போலச் சுகமாகச்சகந் தோற்றுதலிற்சுழுத்தியவத்தையென்பதாம் ........................................ (௬௧)

(அ-கை.) ஆறும்பூமியானபதார்த்தாபாவனை துரியாவத்தையெனல்.(கவி) அமூர்த்து துரியமெனுநாமத் தாறும்பூமியடைந்தொழுங்கி, னெழுந்தபலவாதலையிலனுயிப் பூமிலேபரிசயிப்ப, னுழைந்துநானென்பதும்யானு ததுவுமுளதுமில்லாதுங்,கழிந்துவெறிதேநினைவிலனுய்க்காணுனிருமையொருமைகளை ........................ *

(இ-ள்.) அமூர்த்துதுரியமெனும் - அமூர்த்தமானதுரியமென்கின்ற—நாமத்து - பெயரையுடைய—ஆறும்பூமி- ஆறுவதுபூமியை—ஒழுங்கினடைந்து - கிரமமாகச்சேர்ந்து— எழுந்த- உண்டாகிய—பலவாதலையிலனுய் - நாநாவிதவாதனையில்லாதவனுய்—இப்பூமியில் - இவ்வாறும்பூமியில் —பரிசயிப்பன் - அற்பியாசஞ்செய்வன்—நுழைந்து - புகுந்து—நானென்பதும்- யானென்பதும்—என்னுகதுவும் - நானென்பதல்லாததும் —உளதுமில்லாததும்- உள்ளதுமில்லாதுமாகியவிவைகள்—கழிந்து - நீங்கி—வெறிது - கேவலமாய்— நினைவிலனுய் - மனமில்லாதவனுய்—இருமையொருமைகளை- பேதாபேதங்களை—காணுன்- பாரான். எ-று, (௬௨)

(அ-கை.) இ-து. (கவி) செறியுமுடிச்சுமையமும்போய்சீவன்முத்தசுபாவத்தால், வெறிதுவீடன்றியும்வீடுவிளைந்தோவியத்தின் விளக்கொப்பான், பிறிவில்விண்ணில் வெறுங்குடம்போற்பிறிதுபுறனுட்சூனியமா, யெறியுங்கடலினிறைகடம்போலெங்கும்புறனுண்ணிறைந்திருப்பன் ........................................ *

(இ-ள்.) செறியுமுடிச்சும் - நெருங்கியவகங்காரக்கிரந்தியும் — ஐயமும்போய் - சந்தேகமுநீங்கி—சீவன்முத்தசுபாவத்தால் - சீவன்முத்தத்தன்மையினுல்—வெறிதுவீடன்றியும்-

(அ-கை.) ஞானபூமியினிலக்கணங்கூறியஃதடையுமுபாயமுங்கூறத்தொடங்கியிச்சையை
மதயானையாகவுருவகப்படுத்தியஃதைக்கெடுக்கி லிப்பூமியின்முடிவைத்தெரிசிக்கலாமெ
னல்(கவி) மிகவுமதத்துமதம்பொழிந்துமெத்தென்றினிதா நடையுடைத்தாய், புகர்கொடு
திக்கைநுனியதறிப்பொருகோட்டினைச்சங்கினைநிகராம், பகடுண்டனர்த்தம்பண்ணுமதுப
டுக்கப்படுமேலப்பொழுதே, சுகமாய்விரைவினரர்கடப்பர்சொன்னபூமிப்பரப்பெல்லாம்

(இ-ள்.) மிகவுமதத்து - நிரம்பவுமதங்கொண்டு—மதம்பொழிந்து- மதசலத்தைவருஷித்து—மெத்தென்று - மிருதுவாக—இனிதாம் - இனிமையாகிய—நடையுடைத்தாய் - நடையையுடையதாகி—புகர்கொள் - புள்ளிகளையுடைய — துதிக்கைநுனியதறி - தும்பிக்கையின்முனைதுடித்து—சங்கினைநிகராம் - பணிலத்துக்கொப்பாகிய—பொருகோட்டினை - பொருதாநின்றதந்தங்களையுடைய—பகடுண்டு - யானையானதுண்டு —அனர்த்தம்பண்ணும்-அனர்த்தஞ்செய்கின்ற—அது படுக்கப்படுமேல் - அதுகொல்லப்படுமாயின்—அப்பொழுதே - அப்போதே—சுகமாய் - ஆநந்தமாக—விரைவில் - சீக்கிரத்தில் — நரர் - மானிடர்கள் — சொன்ன-முன்சொல்லப்பட்ட—பூமிப்பரப்பெல்லாம் - ஞானபூமியின்விரிவனைத்தையும் — கடப்பர்-தாண்டுவார்கள். எ-று .......................................................................... (௬௭)

(அ-கை.) அந்தயானையைக் கெடுக்கும்பொருட் டஃது யாதெனவினவுதல். (கவி)
வழியுங்கடமாக்களிறதனை வன்பாற்கொல்லாதிருப்பளவு, மழியந்துயரார்போர்க்க
ளத்திலெவனேசுபடனுமென்ன, மொழியுந்தவனை நீசொன்னமூரிக்களிறேதமர்க்கள
மே, தழியும்படியேதுறைவிடமேதருள்வாயென்றனருண்மூர்த்தி .............. *

(இ-ள்.) கடம்வழியும்- மதசலங்களொழுகுகின்ற—மாக்களிறதனை-பெரிதாகியயானையை—வன்பால் - பலத்தினால்—கொல்லாதிருப்பளவும் - கொலைசெய்யாதிருக்குமட்டும்—இழியும் - இழிவுள்ள—துயரார் - துன்பநிறைந்த—போர்க்களத்தில் - யுத்தகளத்தில்—எவனேசுபடனுமென்ன - எவன்மகாவீரனுவானென்று—மொழியுந்தவனை - சொல்லியவசிஷ்டமுனியைப்பார்த்து—நீசொன்ன - நீர்சொல்லிய—மூரிக்களிறேது- பலமுள்ளயானையாது—அமர்க்களமேது - யுத்தகளமியாது—அழியும்படியேது - அது கெடுந்தன்மையாது—உறைவிடமேது-அதுவாசஞ்செய்யும்ஸ்தானமியாது—அருண்மூர்த்தி-கிருபாவடிவமானஸ்ரீராமர் - அருள்வாயென்றான் - அனுக்கிரகஞ்செய்வாயென்றுவசிஷ்டமுனியைக்கேட்டார். எ-று ............ (௬௮)

(அ-கை.) யானையினுருவகத்தைவெளிப்படுத்தல். (கவி) இராகவற்குமுனிசொ
ல்வானீதுண்டாகவெனல்வடிவாய், சோகவிச்சையெனப்பெயர்கொள் சொரிமாம
தத்தவெங்களிறு, தேகமென்னும்பெருங்காட்டிற்றிரளாஞ்செருக்குமிகச்செய்யும்,
வேகமதத்தவிந்திரியமாம்வெங்கன்றுகளையுடைத்தாகும் .. .......................... *

(இ-ள்.) இராகவற்கு- ஸ்ரீராமருக்கு—முனிசொல்வான் - வசிஷ்டமுனிசொல்லுவார்—ஈதுண்டாகவெனல் - இதெனக்குண்டாகவேண்டுமென்றல்—வடிவாய் - உருவமாய்—சோகவிச்சையென - துன்பத்தைவிளைக்குமாசையென்று—பெயர்கொள்-நாமத்தையுடைய—சொரிமாமதத்த - பொழியாநின்றமகாமதசலத்தையுடைய—வெங்களிறு-கொடியயானையானது—தேகமென்னும் - சரீரமென்கின்ற—பெருங்காட்டில் - மகாரண்யத்தில்— திரளாஞ்செருக்கு-மிகுந்தகளிப்பையுடைய (லீலையை) — மிகச்செய்யும் - மிகவுஞ்செய்யும் — வேகமதத்து-கோபமுமதமுமுள்ள—இந்தியமாம் - இந்திரியங்களாகிய—வெங்கன்றுகளை - கொடியகுட்டிகளை—உடைத்தாகும் - உடையதாகும். எ-று ............................................ (௬௯)

(அ-கை.) இ-து. (கவி) இனிதுநாவாலுரைசெய்யுமிதயமென்னுங்காட்டுறையும், பனி
வல்வினைகோடிரண்டுளதாம் பலவாதனையாமதஞ்சொரியு, மனிசமெங்கும் படர்வடிவா
மறிவில்பிறவிநோக்கங்கண், முனிவிலடுபோர்ப்பூமிகளாமூரியிச்சைமதகளிறே ...... *

(இ-ள்.) இனிது - இனிமையாக—நாவாலுரைசெய்யும் - நாக்கினால்வசனிக்கும்—இதயமென்னும்- மனமென்கின்ற—காட்டுறையும்-(துர்க்கமான) வனத்திலடங்கும்—பனிவல்வினை-நடுக்கஞ்செய்கின்றகொடியவிருவினைகளாகிய—கோடிரண்டுளதாம் - இரண்டுகொம்புள்ளதாம்—பலவாதனையாம் - அநேகவாசனையாகிய — மதஞ்சொரியும் - மதத்தைப்பொழியும்—அனிசமெங்கும் - எப்பொழுதுமெவ்விடத்திலும் — படர்வடிவாம் - பரவுகின்றவுருவத்தையுடையதாம்—அறிவில் - உணர்வில்லாத—பிறவிநோக்கங்கள் - சம்சாரதிருஷ்டிகளே— முனிவிலடுபோர்ப்பூமிகளாம் - சினத்தினாற்கொல்லுகின்றயுத்தகளமாகும் — மூரியிச்சைமதகளிறு-பலமுள்ளவாசையேமதயானையாம். எ-று. (இ-ச-க-ம்) இச்சையென்னுமியானையானதுவினைக

ளென்னுந்தத்தங்களையும் வாசனையென்னுமதங்களுடன்றேகமென்கின்றவனத்திலிருந்திந்திய மென்னுங் கன்றுகளோடும் பவப்பார்வையென்னும் யுத்தகளத்தில்வசிக்குமென்பதாம். (௫௰)

(அ-கை.) வீறுள்ளவிவ்விச்சையே யாத்மத்துரோகஞ் செய்யுமெனல். (கவி) வெற்றித்திறமுந்தோல்விகளும்மென்மேனல்கியிச்சையெனுஞ், செற்றகளிறுதீனர்களாஞ் சீவத்திரளைச்சங்கரிக்கு, நிற்றத்தொழில்வாதனைபாவ நெஞ்சுமதிசங்கற்பங்கள், பற்றும்பிறவுமிதன்பெயராய்ப் பண்டமாய்நெஞ்சுள்ளிருக்கும்............ *

(இ-ள்.) வெற்றித்திறமும் - செயமும்—தோல்விகளும்- அபசயமும்—மேன்மேனல்கி- மேன்மேலுங்கொடுத்து—இச்சையெனும் - ஆசையென்கின்ற—செற்றகளிறு- கோபத்தையுடையயானையானது—தீனர்களாம் - எளியரான —சீவத்திரளை- சீவகோடிகளை —சங்கரிக்குஞ் - சங்காரஞ்செய்யும்—நிற்றத்தொழில் - நிலையாயிருக்கின்றவிருத்தியையுடைய—வாதனை - வாசனையும்—பாவம்-பாவனையும்—நெஞ்சும்-மனமும்—மதி-புத்தியும்—சங்கற்பங்கள்- சங்கற்பங்களும்—பற்றும்-ஆசைகளும்—பிறவும்- மற்றவைகளும்—இதன்பெயராம்-இதனதுநாமங்களாண—பண்டமாய்- திரவியங்களாய்—நெஞ்சுள்ளிருக்கும்- அந்தக்கரணத்திலிருக்கும். எ-று. (௫௧)

(அ-கை.) எவ்விதத்திலுமிச்சாத்யாகஞ்செய்யவேண்டுமெனல். (கவி) நிலைமையென்னுமுயர்கணைபானிறைந்தவலியால்விநோதத்தாற், றொலைவில்பொருளியாவையுமாகித்துன்னியொன்றுமிச்சைதனை, யுலைவிலெல்லாவகையாலுமியோகிவெல்வதுத்தமமா, மலைவோடீதுண்டாகவெனலகத்தேதழைக்கிலதுகேளாய்............ *

(இ-ள்.) நிலைமையென்னும் - தைரியமென்கின்ற—உயர்கணையால் - மாட்சிமைப்பட்டவம்பினால்—நிறைந்தவலியால் - மிகுந்தபலத்தினால்—விநோதத்து - விளையாட்டாக—தொலைவில்பொருளியாவையுமாகி - அளவற்றவஸ்துக்களனைத்துமாய்—துன்னியொன்றும் - நெருங்கியொன்றிய—இச்சைதனை- ஆசையென்கின்ற(யானையை) —உலைவில்- அச்சமில்லாமல்—எல்லாவகையாலும்—எந்தப்ரகாரத்தினாலும்—யோகிவெல்வது- ஞானியானவர்செயிப்பது—உத்தமமாம் - நன்மையாகும்—அலைவோடு - சஞ்சலத்துடன் — ஈதுண்டாகவெனல் - இதெனக்குண்டாகவேண்டுமென்பது—அகத்தேதழைக்கில் - மனதில்வளர்ந்தால் — அதுகேளாய்- அதைக்கேட்பாய். எ - று ............ (௫௨)

(அ-கை.) இச்சையேபந்தமதனிவிர்த்தியேமுத்தியெனல். (கவி) பேசுமிதுதாணிற்பளவும்பிறப்பாநச்சுவிடுசிகைதா, னாசமடையாதிராகவனேஞானசுருக்கமிதுகேளாய், பாசமுறவீதுண்டாகவென்று படருமனந்தானே, யேசுபிறவியிம்மனத்தி னிறவேமுத்தியிவ்வளவே............ *

(இ-ள்.) பேசும்- சொல்லப்பட்ட—இதுகாணிற்பளவும் - இவ்வாசையாணிருக்கும்பரியந்தம்—பிறப்பாம் - சம்சாரமாகிய—நச்சுவிடுசிகைதான் - விடவிடுசியானது— இராகவனே- ஸ்ரீராமா—நாசமடையாது - அழியமாட்டாது— ஞானச்சுருக்கமிதுகேளாய் - ஞானசங்கிரகமானவிதைக்கேட்பாய்—பாசமுற - பந்தமடைய— ஈதுண்டாகவென்று - இதெனக்குண்டாகவேண்டுமென்று—படருமனந்தானே - விரிபாநின்றமனதே —ஏசுபிறவி - பழிக்கின்றசம்சாரமாகும்—இம்மனத்தினிறவே- இந்தமநோநாசமே—முத்தி-மோக்ஷமாகும்—இவ்வளவே-இவ்வளவுதானே. எ-று. (இ-௩-க-ம்) இச்சாத்யாகஞ் செய்யும்பொருட்டதன் றன்மைகளைப்பகுத்துச்சொல்லியதாம்............ (௫௩)

(அ-கை.) இச்சாத்யாகவுபாயங்கூறல். (கவி) மருளுமயறீர்விமலன்பால் வடித்துத்தெளிந்தவுபதேசந், தருதல்கண்ணாடியின்புறத்தெற் றயிலத்துளிபோலிளைப்பாறுந், தெருளுமுணர்வாலிம்மோகந்தீர்ந்துவிச்சையங்குர்மா, யுருவமனங்கிஞ்சிலுந்தோன்றுதுணர்விலாமைமாத்திரத்தால்............ *

(இ-ள்.) மருளுமயறீர் - மருட்சிசெய்கின்றமயக்கந்தீர்ந்த—விமலன்பால்-நின்மல(சித்தனை)சீஷினிடத்தில்—வடித்துத்தெளிந்த- தெளிவாகத்தெளிந்த—உபதேசந்தருதல்-உபதேசத்தைக்கொடுத்தல்—கண்ணாடியின்புறத்தில் - தர்பணத்தின்பக்கத்தில் — தயிலத்துளிபோல்- தயிலவிந்துவைப்போல—இளைப்பாறும் - விஸ்ராந்தியடையும்— தெருளுமுணர்வால் - தெரிவுள்ளஞானத்தினால்—இம்மோகந்தீர்ந்து - இச்சநநமயக்கத்தைவிட்டு —இச்சையங்குரமாய்- ஆசைமுளையாக —உருவமனம் - வடிவமாகியமனது—உணர்விலாமைமாத்திரத்தால் - அசம்வேதனத்தினால்—கிஞ்சிலுந்தோன்றாது - அற்பமுந்தோன்றமாட்டாது. எ-று. (இ-ம்) ஆசாரியருபதேசார்த்தத்தைச்சிந்திக்கச்சிந்திக்கச்சிந்தனைதிதசுகம்போதவுதயமானவசம்வேதனத்தா

விச்சாத்தியாகம்வருமென்பதாம். ஆசிரியருபதேசவாக்கியார்த்தத்தைக்கேட்டு- இருந்தறிதெரிந்தபடியாற் சத்தேசித்தென்றுந்தெரிவு சுகமாயெழுகின்றபடியாற் சித்தேயாநந்தமென்றுமானந்தமேயாவருக்குஞ் சுபாவமாய்விளங்குதலா லதுவேசித்தென்று மச்சித்திலியாவருஞ்சுஞ்சரித்திருத்தலி னதுவேசத்தென்று மிங்ஙனஞ் சச்சிதாநந்த வயிராக்கியஸ்வரூபமேதன துஸ்வரூபமெனச் சிந்தித்து, சிந்தித்தபடி காக்ஷியுற்றுத்தெளிந்து, தெளிந்தபடி யதுவாய்ச் சுத்திருக்குஞ் சமாதியடைந்து, அச்சமாதியினின்று வெளிப்படும்போது லேகதேச விஷயாநந்தங்கணீங்கி யேகாகாரமான பிரமாநந்தமாகவு மேகதேசமான விஷயஞானநீங்கி யேகாகாரமானபிரமஞானமாகவு மிவ்விரண்டுமொன்றான நிரதிசயாநந்த சைதன்யமேசுவாநுபூதி ப்ரத்யக்ஷமாகச் சிந்திக்கச் சிந்திக்கச்சிந்தநாதீதமான சுகபோதமாக விளங்கிய சாக்ஷாத்காரமேயசம்வேதனமென்பதாம் ........................................ (௫௪)

(அ-கை.) இ-து. (கவி) ஊறுவநத்தந்தருமிச்சை யொருகால்வரினு மப்போதே,
யாறுவிடயத்துணர்வின்மை யானவதனாலறுத்திடுவாய், கூறுமிச்சைபலவடிவாய்க்
கோத்ததெனினுமிவ்வுடலின், மாறுதானவாதனையைமாற்றுதிராதுவுணர்வின்மை.

(இ-ள்.) ஊறுவநத்தந்தரும்-கெடாதவநர்த்தத்தைக்கொடுக்கின்ற—இச்சை-ஆசையானது—ஒருகால்வரினும் - ஒருபோதுவந்தாலும்—அப்போதே - அக்கணத்தே— ஆறுவிடயத்து- நீங்காதவிஷயத்தில்—உணர்வின்மையான - அசம்வேதனமாகிய — அதனாலறுத்திடுவாய்- அதனாற்கெடுப்பாய்—கூறுமிச்சை - பலவிதமானவிச்சையானது—பலவடிவாய்- அநேகவுருவாய்—கோத்ததெனினும் - கோத்துக்கொண்டிருந்தாலும்— இவ்வுடலின் - இச்சரீரத்தின்—மாறுதானவாதனையை - நீங்காமலிருக்கின்றவாசனையை—உணர்வின்மை - அசம்வேதனமானது—மாற்றுதிராது - நீக்காமலிராது. எ - று. (இ-ம்) இச்சாவாசனை யசம்வேதனத்தாற் கெடுமென்பதாம் ........................................ (௫௫)

(அ-கை.) அசம்வேதனத்தையடையுமுபாயங்கூறல். (கவி) தள்ளுமுடிவின்றியினி
த்தைச்சவத்தின்றிரளைவிருப்பறல்போற், றெள்ளும்பிரத்தியாகாரத்திறத்தினாலேவா
தனையை, நள்ளுமிச்சைமாத்திரமாய் நயவாதிருக்குமப்போதே, யுள்ளும்வெறிதேயி
ருப்பதுவே யுணர்விலாமையுறுமுயற்சி ........................................ *

(இ-ள்,) சவத்தின்றிரளை - பிரேதக்கூட்டங்களை — விருப்பறல்போல் - இச்சியாததுபோல—முடிவின்றியின் - முடிவில்லாமலிருக்கின்ற—இத்தை - இந்தவாசனையை — தள்ளு- விரும்பாமனீக்குவாய்—தெள்ளு- தெளிவாகிய—பிரத்தியாகாரம்-பிரத்தியாகாரமென்னும்—திறத்தினால் - காரணத்தினால்—வாதனையை - வாசனையை—நள்ளுமிச்சைமாத்திரமாய்- விரும்புகின்றவாசையினளவா (கக்கருதி) — நயவாதிருக்கும் - ஆசியாதிருக்கும்—அப்போதுள்வெறிதிருப்ப- அக்காலமனஞ்சும்மாயிருக்கும்— அதுவேயுணர்விலாமை - அதுவேயசம்வேதனத்தை—உறுமுயற்சி - அடைகின்றமுயற்சியாகும். எ-று. (இ-ம்) சுகபோதவயிக்கியத்திலசைவற்றிருப்பதே யதீதமுண்டாகுநெறியென்பதாம் ........................................ (௫௬)

(அ-கை.) சங்கற்பநாசமேசிவமாமெனல். (கவி) எனதீதென்னுமறிவுதனையிடர்கற்
பனையென்றுரைசெய்வார், கனமாமறிவின்பாவனையாற்காண்பதெல்லாங்கையகலி,
லனகாதிபனேகற்பனைகளற்றதென்றாருயர்நல்லோர், மனமாதினைவேசங்கற்பமன
த்தினினைவற்றதுசிவமே ........................................ *

(இ-ள்.) எனதீதென்னும் - ஈதெனதென்கின்ற—அறிவுதனை- அறிவை—இடர்கற்பனையென்று- துன்பம்பொருந்தியகற்பனையென்று—உரைசெய்வர் - (சத்துக்கள்)சொல்லுவார்கள்—கனமாமறிவின்பாவனையால் - வியாபகஞானபாவனையினால்—காண்பதெல்லாம்-காணப்பட்டசகலமும்—கையகலில்- நீங்கினால்—அனகாதிபனே- களங்கமற்றவிராசாவே— உயர்நல்லோர்-மேலாகியசத்துக்கள்—கற்பனைகளற்றதென்றார் - கற்பனைகணசித்ததென்றுசொன்னார்கள்—மனமாதினைவே - மநோபாவமே—சங்கற்பம்-சங்கற்பமாகும்—மனத்தினினைவற்றது-மனத்தினதுபாவனையற்றதே—சிவம்-சிவமாகும். எ-று, (இ-ம்.) ஞானபாவனையாலதன் சங்கற்பரூபமாகியவிஷயங்கணீங்கிற் சர்வம்பிரமமயமாய் ப்ரகாசிக்குமென்பதாம் ........................................ (௫௭)

(அ-கை.) அறிவறியாமைநீங்கினவறிவாய் விளங்குவாயெனல். (கவி) எட்டியறிந்தத
றியாத திரண்டும்பாவிப்பதுநினைவாய், பட்டமரம்போலிவையிரண்டிறப்பற்றுநினை
வுதனைமறந்து, வட்டமிடுமியாவையும்விளைவின் மறந்துசான்றமறியுடைத்தாய்த்,
திட்டமுறத்தான்றுதலில்லாத் திறத்தோனுக்திகிநிற்பாய் ........................................ *

(இ-ள்.) எட்டி- விஷயத்தைத்தாவி—அறிந்தது - உணர்ந்ததும்—அறியாதது-உணராததுமாகிய—இரண்டையும்பாவிப்பது - இரண்டையும்பாவனைசெய்யாமற்த—நினைவாம்-பாவனையாகும்—பட்டமரம்போல் - பட்டுப்போனவிருக்ஷத்தைப்போல—இவையிரண்டில்- இந்தவறிவறியாமையிரண்டிலும்—பற்றுநினைவகலமறந்து - பொருந்தாநின்றபாவனையைவிட்டு—வட்டமிடுமியாவையும் - சுழலாநின்றசகலத்தையும்— விரைவின்மறந்து - சீக்கிரத்தின்மறந்து—சான்றமதியுடைத்தாய் - பேரறிவையுடையவனாய்— திட்டமுறத்தோன்றுதலில்லா- நிலைமையாகக்கூடமான—திறத்தோனுநிதிலந்திற்பாய் - குணத்தோனுய்ந்நிலைபெற்றிருப்பாய். எ-று. (இ-ம்) விஷயத்தையறிதலுந் தன்னையறியாததுமான விரண்டையுநீக்கத்தானே தானாய் விளங்கியசுகபோதமான பிரமஞானமாக விளங்குவாயென்பதாம்....................................................(௫௮)

(அ-கை.) இராமனுக்குபதேசிப்பதை முடிக்கும்பொருட் டவையைப்பார்த் ததிசயித்துரைத்தல். (கவி) கேளாநின்றானிவனென்ன வொருவன்கிட்டாமையினாலே, தோளாலுயரக்கைகொடுத்துத் தோன்றநின்றுசொல்கின்றேன், மீளாதானவசங்கற்பம்விமலமானபரமபதம், வாளாயுள்ளேபாவிக்கமாட்டாரதனையென்னம்மா. ......*

(இ-ள்.) இவன்- இவன்—கேளாநின்றானென்ன-கேட்கின்றவனென்றுசொல்லும்படி—ஒருவன்கிட்டாமையினால் - ஒருவரும்பணுகாததினால்—தோளால் - புசங்கள்—உயரக்கையெடுத்து-உயரும்படிகரத்தைத்தூக்கி—தோன்ற - (சகலருக்குமிந்தவருத்தந்) தோற்றும்படியாக—நின்றுசொல்கின்றேன் - நின்றுவசனிக்கின்றேன்—மீளாதான-திரும்பாததாகிய—அசங்கற்பம்-சங்கற்பபாவமே—விமலமானபரமபதம் - நிர்மலமாகியபரமபதமாகும்—அதனை - அவ்வசங்கற்பத்தை—வாளா- மௌனமாக—உள்- அகத்தில்—அம்மா - ஆச்சரியம்—என்பாவிக்கமாட்டார்- ஏன்பாவனைசெய்யமாட்டார். எ-று. (இ-ம்) இங்ஙனம்போதித்துவந்தவாக்கியார்த்தசூட்சுமம்வெளிப்படும்பொருட் டறிவிலசைவற நிற்றல் சுகமாயிருக்க வங்ஙனநில்லாததேனோவென்றிரங்கிக் கூறினானென்பதாம் .............................................................................. (௫௯)

(அ-கை.) சபையைப்பார்த்துரைத் திராகவனிடமாய் முடிக்கத்தொடங்கிச் சகசநிஷ்டையைக்கூறுதல், (கவி) செறிபார்முழுதாள்பவன்பதமுந் திரணமென்னப்பரமபதம், வெறிதேயிருக்குமிருப்பினான் மேவுமன்றேபேரூர்க்கு, நெறிபோம்பதிகன்றனக்கிருதாணிலையாதிருக்கநடப்பதுபோற்,பொறிகூர்தனதுதொழினடக்கும்பூணுவாளாவிருந்திடவே

(இ-ள்.) செறிபார்முழுது - நெருங்கியபூமியெல்லாம்— ஆள்பவன்பதமும் - ஆளுகின்றசக்கரவர்த்திப்பதமும்—திரணமென்ன - துரும்பென்று(சொல்லும்படியாயிருக்கும்)—பரமபதம்- பிரமபதமானது—வெறிதேயிருக்குமிருப்பினால் - மவுனமாயிருக்கின்றவிருப்பினால்—மேவும்- அடையப்படும்—பேரூர்க்கு - மகாநகரத்துக்கு—நெறிபோம்- மார்க்கத்திற்செல்லும்—பதிகன்றனக்கு - புருடனுக்கு—இருதாள்- இரண்டுபாதமும்—நிலையாதிருக்க - எண்ணமேயிருக்க—நடப்பதுபோல்- செல்லுவதுபோல—பொறிகூர்- பொலிவுமிகுந்த—தனதுதொழில்- தனதுசெய்கையானது—பூணுவாளாவிருந்திட - சோராமற்சும்மாயிருக்க—நடக்கும்-நடந்துவரும். எ-று. (இ-ம்) அசம்வேதனத்தாற் பரமபதத்தை யடையினதன்சந்நிதானத்திற்சகலகிருத்தியங்களுந் தானேநடந்துவருமென்பதாம்.................................................(௬௰)

(அ-கை.)வாக்கியார்த்தசங்கிரகங்கூறுதல்.(கவி)இங்குப்பன்னும்பலகாலென்னியம்புசுருக்கமிதுகேளாய், சங்கற்பந்தான்பவபந்தஞ்சங்கற்பந்தீர்ந்ததுமுத்தி, பங்கற்றிறலிலையறிவிலவுபவமற்றுறுமறிவுருவே, துங்கச்சகங்களைநோக்கிச் சுகமெப்படியப்படிநிற்பாய்.. *

(இ-ள்.) இங்கு- இவ்விடத்தில்—பன்னும்பலகாலென்- சொல்லுகின்றபலவாற்றிறுமென்ன பிரயோசனம்—இயம்புசுருக்கம் - சொல்லாநின்றசங்கிரகமான—இதுகேளாய்-இந்தவருத்தத்தைநீகேட்பாய்—சங்கற்பந்தான்பவபந்தம்- சங்கற்பமேசம்சாரபந்தமாகும்— சங்கற்பந்தீர்ந்ததுமுத்தி - சங்கற்பநாசமேமோக்ஷமாகும்—பங்கற்று - பிரிவில்லாமல்—எல்லை- முடிவும்—அழிவு- நாசமும் —அலைவு- சலனமும்—பவம்-சம்சாரமும்—அற்று-இல்லாமல்—உறும்-உபசாந்தமாகின்ற—அறிவுருவே - ஞானஸ்வரூபமே— துங்கச்சகங்களைநோக்கி - பரிசுத்தமாகிய உலகங்களைப்பார்த்து—சுகமெப்படி - நிரதிசயானந்தமெப்படிவிளங்குகின்றதோ—அப்படிநிற்பாய்- அந்தப்பிரகாரமிருப்பாய். எ-று. ( இ-ம் ) காணப்பட்டயாவுஞ் சைதன்னியவடிவமாகப்பார்க்கும்போ தாநந்தசுகஸ்வரூபமாய் விளங்குவாயென்பதாம்.... ............ (௬௧)

(அ-கை.) சுகபோதமாகச்சஞ்சரிப்பாயெனல். (கவி) ஒழியாநிலையாமுபசாந்தயோ கமென்பதுணர்வின்மை, கழியாயோகநிலையினனாய்க் கவர்பற்றொழித்துத்தொழில் செய்வா, யிழியாதியற்றப்படாவுள்ள மிறந்தேயோகமுணர்வின்மைம், வழியான்மிக வுமதின்மயமாய் வல்லைநிற்பாய்மகிழ்ந்தபடி........................................ *

(இ-ள்.) ஒழியாநிலையாம்-நீங்காதநிலைமையாகிய—உபசாந்தயோகமென்பது-உபசாந்தஞானமென்றுசொல்லுவது—உணர்வின்மை- அசம்வேதனமாம்—கழியா-முடிவில்லாத—யோகநிலையினனாய்- ஞானநிலையையுடையவனாய்—கவர்பற்றொழித்து - கிரகிக்காநின்றவாசையைவிட்டு—தொழில்செய்வாய் - (உனக்குள்ள)செய்கையைச்செய்வாய்—இழியாதியற்றப்படா-ஈனமாகச்செய்யப்படாத—உள்ளமிறந்தயோகம் - மனோநாசமானஞானமே — உணர்வின்மை- அசம்வேதனமாம்—வழியால் - இந்தநெறியினால்—மிகவுமதின்மயமாம்- மிகவு(மவ்வுபசாந்தஞானாகார)மாய்—மகிழ்ந்தபடி- ஆநந்தித்தப்ரகாரமே— வல்லைநிற்பாய்-சீக்கிரத்திலிருப்பாய். எ-று. (இ-ம்) இக்கணமேயாநந்தாதீதமாக விளங்கும்போதாகாரமாய்ச் சகலகிருத்தியங்களுஞ்செய்வாயென்பதாம்........................................ (௬௨)

(அ-கை.) சாக்ஷாத்காரநிசையைக்கூறுதல். (கவி) எனக்கென்னுமுணர்வுடைமை யிடர்விட்டகலாதுணர்வின்மை, யனர்த்தமில்லாவீடளிக்குமாசையேதிங்கதுசெய் வாய், சனிப்பில்சிவமெங்கணுமுளது சாந்தஞ்சுபஞ்சித்துருவென்னுங், கனத்தவந் தவொருநினைவே கருமத்யாகமிராகவனே........................................ *

(இ-ள்.) ஈது - இது—எனக்கென்னும் - எனக்கென்கின்ற — உணர்வுடைமை - அறிவுடைமை—இடர்விட்டகலாது - துன்பத்தைவிட்டுநீங்காது — உணர்வின்மை - அசம்வேதனம்—அனர்த்தமில்லா - சுயப்ரயோசனமான—வீடளிக்கும் - மோக்ஷத்தைக்கொடுக்கும் — ஆசையே து- (உனது)பிரியமாது—இங்கதுசெய்வாய் - இவ்விடத்திலதனைச்செய்வாய்— சனிப்பில் சிவம்- உதிபாத(சுயம்ப்ரகாசமான)சிவமானது—எங்கணுமுளது-எவ்விடத்திலுமிருக்கின்றசத்து—சாந்தம்- (அதுவேசகலமும்விடுபட்டிருக்கின்ற)வுபசாந்தமான—சுபம்-மங்களாகாரமாகிய(நிரதிசயாநந்தம்)—சித்துரு- அதுவேசதோதயமானஞானஸ்வரூபம்—என்னும் -என்று சொல்லப்பட்ட—கனத்த- கனமாகிய— அந்தவொருநினைவே - அந்தவத்துவிதபாவனையே—இராகவனே - ஸ்ரீராமா—கருமத்யாகம் - கருமத்யாகமாகும். எ-று. (இ-ம்.) நித்தியசுகபோதமானசிவஸ்வரூபமே யாவுமாய் விளங்குதென்னுஞ்ஸ்வானுபூதியேகருமத்யாகமெனவாக்கியார்த்தவுபதேசத்தை வசிஷ்டமுனிமுகித் திந்தப்ரகாரஞ்சீவன்முத்தித்தன்மையிலிருந்திராமாவதாரங்கத்தாக் குறித்தான துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்வாயென்றபடியே ஸ்ரீராமர்செய்து பின்விதேகமுத்தியையடைந்தாரொன்றுபரத்துவாசமுனிக்கு வான்மீகமுனியனுக்கிரகஞ் செய்யவந்த ப்ரகாரமேபரத்துவாசரு நிரதிசயாநந்த சைதன்னிய சாக்ஷாத்காரமான சீவன் முத்திப் பதத்திற் சுகித்திருந்து பின் விதேகமுத்தியையடைந்தனரென்பதாம்........ (௬௩)

(அ-கை.) நூலின்வரலாறுரைத்தல்.(கவி) என்றுவசிட்டமுனிராமற்கிசைத்தானென்றுவா ன்மீகி,சொன்னனாறுயிரங்கிரந்தத்தொகையாற்பரத்துவாசனுக்குப்,பின்னளதிலாறுயி ரத்தைப்பிரித்தானிவ்வாறுலகுய்யப்,பன்னுமறைதேர்கான்மீரப்பண்டிதப்பேர்பரமகுரு.

இ-ள். என்று - இப்படியென்று—வசிட்டமுனி - வசிஷ்டமுனியானவர் — இராமற்கிசைத்தானென்று - ஸ்ரீராமருக்குச்சொன்னதொன்று— நூறுயிரங்கிரந்தத்தொகையால் - இலட்சங்கிரந்தக்கணக்கினால்—பரத்துவாசனுக்கு- பரத்துவாசரிஷிக்கு—வான்மீகிசொன்னான்- வான்மீகமுனியானவர்சொன்னார்—பின்னாள் - பிற்காலத்தில்—அதில்-அந்தவிலட்சங்கிரந்தத்தில்—ஆறுயிரத்தை - ஆறுயிரங்கிரந்தத்தை—இவ்வாறு - இவ்வண்ணம்—உலகுய்ய - சகத்தி(லுள்ளவாத்மாக்கள்)—பிரமாநந்தத்தில்வாழும்படி — பன்னுமறை - சுயமாயுண்டானவேதத்தை—தேர் - ஆராய்ந்தறிந்த — கான்மீரப்பண்டிதப்பேர் - காஸ்மீரப்பண்டிதனென்னு நாமத்தையுடைய—பரமகுரு - பரமகுருவானவர்—பிரித்தான் - பிரித்தெடுத்தார். எ-று............ (௬௪)

(அ-கை) நூலின்மகிமையுரைத்தல். (கவி) சாத்திரத்திற்பெரியதிதுதடங் காவியத்திற்பெரியதிது, மாத்திரத்தின்மெய்ஞ்ஞானவழியாற்பெரியதிதுஞா ன, நேத்திரத்திற்பெரியோர்க்குநிதியோற்பெரியதிதுகதிரோன், கோத்திரப் பொற்பாத்திரத்திற்குதித்தவமுதாய்வாசிட்டம்........................................ *

(இ-ள்.) வாசிட்டம் - ஞானவாசிட்டமென்னும் — இது - இந்நூலே — சாத்திரத்திற்பெரியது - ஞானசாஸ்திரங்களிற்பெரியதாகும் — இது - இதுவே — தடங்காவியத்தில் - விசாலமுள்ள காவியங்களில — பெரியது - பெரியதாம் — இது - இதுவே — மெய்ஞ்ஞானமாத்திரத்தின்றத்துவ ஞானமாத்திரத்தின் — வழியால் - மார்க்கத்தினால் — பெரியது - மகத்தானதாம் — இது - இதுவே — ஞானநேத்திரத்தில் - ஞானதிருஷ்டியில் — பெரியோர்க்கு - சத்துக்களுக்கு — திதிபோல் - சங்கநிதிபதுமநிதியைப்போல — பெரியது - மகத்தானதாம் — கதிரோன் - சூரியனது — கோத்திரம் - கோத்திரமென்னும் — பொற்பாத்திரத்தில் - கனகபாத்திரத்தில் — குதித்தவமுதாம் - பாய்ந்தவமுதாகும். எ-று ............................................................ (௬௫)

(அ-கை.) பிரமன்முதலியவாசிரியரைவாழ்த்துதல். (கவி) மலரோன்வாழிநாமாதுவாழி வசிட்டமுனிவாழி, யுலகாளிராமன்மிகவாழியுயர்வான்மீகமுனிவாழி, நலமார்பரத்துவாசமுனிநாளும்வாழிவாசிட்டம், பலமாவாழிகான்மீரப்பண்டிதப்பேர்முனிவாழி .......... *

(இ-ள்.) மலரோன்வாழி - பங்கயாசனன்வாழக்கடவது — நாமாதுவாழி - சரஸ்வதிவாழக்கடவது — வசிட்டமுனிவாழி - வசிஷ்டமுனிவாழக்கடவது — உலகாள் - அரசாங்கஞ்செய்கின்ற — இராமன்மிகவாழி - ஸ்ரீராமர்மிகவும்வாழக்கடவது — உயர்வான்மீகமுனி - மேலானவான்மீகமுனியானவர் — வாழி - வாழக்கடவது — நலமார்பரத்துவாசமுனிநாளும்வாழி - நன்மைநிறைந்தபரத்துவாசமுனிவரெந்நாளும்வாழக்கடவது — வாசிட்டம்பலமாவாழி - ஞானவாசிட்ட(மாத்மாக்களுக்கு) ப்ரயோசனமாகவாழக்கடவது — கான்மீரப்பண்டிதப்பேர் - காஸ்மீரபண்டிதனென்னுநாமத்தையுடைய — முனிவாழி - இருஷியானவர்வாழக்கடவது. எ-று. (௬௬)

(அ-கை.) பிரமன்முதலிய வாசிரியர்வடிவத் தனதுவடிவமாயிருத்தலி னாவணங்குவனெனல். (கவி) தேமென்மலரோன்பதம்புகழ்வோ தெளிந்தவசிட்டன்பதம்பரவோ, விராமன்கமலப்பதந்துதிக்கோ வியல்வான்மீகிப்பதமேத்தோ, பாமன்கீர்த்திப்பரத்துவசன்பதமேபழிச்சோவாசிட்ட, நாமம்பெறுநூற்பதம்வியக்கோ நான்சேர்பதத்தைநன்றென்கோ ........................................ *

(இ-ள்.) தேமென் - தேன்கனிறைந்தமிருதுவாகிய — மலரோன் - தாமரைப்பூவில்வீற்றிருக்கும்பிரமாவினது — பதம்புகழ்வோ - பதத்தைத்துதிப்பனோ — தெளிந்த - தெளிந்திருக்கின்ற — வசிட்டன்பதம்பரவோ - வசிஷ்டமுனிபாதத்தைத்துதிப்பனோ — இராமன் - ஸ்ரீராமருடைய — கமலப்பதந்துதிக்கோ - தாமரைமலர்போன்றபாதத்தைத்துதிப்பனோ - இயல் - இயல்பையுடைய — வான்மீகிப்பதம் - வான்மீகமுனிவரதுபாதத்தை — ஏத்தோ - தோத்திரஞ்செய்வனோ — கீர்த்தி - கீர்த்தியையுடைய — பரத்துவசன் - பரத்துவாசமுனிவரது — பதமேபழிச்சோ - பதத்தைத்துதிப்பனோ — வாசிட்டநாமம் - வாசிட்டமென்னும்பெயரை — பெறும் - பெற்றிருக்கின்ற — நூல் - ஞானசாஸ்திரத்தினது — பதம்வியக்கோ - பதத்தையதிசயிப்பனோ — நான்சேர்பதத்தை - யானடைந்திருக்கின்றபரமபதத்தை — நன்றென்கோ - நன்றென்றுசொல்லுவனோ. எ-று.

(அ-கை.) இந்நூலைப்பெற்றவர்களின் பேறுரைத்தல். (கவி) பரமமேனிவசிட்டமுனிபச்சைமேனிபிராமற்குப், பிரமஞானமுணர்வித்தபெருவாசிட்டநன்னூலைத், திரமதாகக்கற்பளவேசீவன்முத்திப்பதஞ்சேர்வ, ருரமதாகவுள்ளுணர்வோருறுபேறெங்ஙனுரைப்பதுவே.

(இ-ள்.) பரமமேனி - பிரமஸ்வரூபமாயிருக்கின்ற — வசிட்டமுனி - வசிஷ்டமுனியானவர் — பச்சைமேனி - மேகவண்ணனான — இராமற்கு - ஸ்ரீராமருக்கு — பிரமஞானமுணர்வித்த - பிரமஞானத்தைப்போதித்த — பெரும் - மாட்சிமைப்பட்ட — வாசிட்டநன்னூலை - ஞானவாசிட்டமென்னுஞானசாஸ்திரத்தை — திரமாக - நிலையாக — கற்பளவே - கற்றமாத்திரத்தில் — சீவன்முத்திப்பதம் - சீவன்முத்திப்பதத்தை — சேர்வார் - அடைவார்கள் — உரமதாக - ஞானமாத்திரமாக — உள்ளுணர்வோர் - உள்ளத்திற்கொள்பவர்கள் — உறுபேறு - அடையுநிலைபத்தை — எங்ஙனுரைப்பது - எப்படிசொல்லுவது. எ-று. (இ-ரு-க-ம்) தனதுநிரதிசயானந்தசதன்மயதலத வெளிப்படுத்தின சுருதிதுருஸ்வானுபவத்தை வியந்துரைத்ததாம். (௬௮)

திருவாணப்பிரகரணமுற்றிற்று.

சற்குருவே நமா.

ஆகப் பிரகரணமாறுள்பட - கதை - சருக்கம் - கவிதை (௨௬௫௭)

# இந்நூலாசிரியர்மரபுகூறல்.



தாள்வந்த மலரோன்றன் மனத்துதித்த வசிட்டனயன் றன்பாற்கேட்டு....... *
நாள்வந்தான் போகாத விராமனுக்கங் குபதேச நல்கி யிங்கே.................. *
யாளவந்தான் வீரையின்மா தவப்பட்ட னங்க்சவவ தாரமாகி.................. *
மீளவுந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயனமும் விளம்பினானே............... *

(இ-ள்.) தாள் - தண்டையுடைய—வந்த - மாதவனுபியினுதித்த — மலரோன்றன் - தாமரைப்பூவில் வாசமாகிய பிரமதேவனது— மனத்துதித்த - மனதிலுண்டான — வசிட்டன் - வசிஷ்டமுனியானவர்—அயன்றன்பால்- பிரமாவினிடத்தில்—கேட்டு- (இந்த ஞானார்த்தத்தைக்) கேட்டு — நாள்-தினங்கள்— அவந்தான்போகாத - வீணாகக்கழியாத — இராமனுக்கு - ஸ்ரீராமருக்கு— அங்குபதேசநல்கி - அவ்விடத்தி லனுக்கிரகஞ்செய்து — இங்கு - இவ்விடத்தில்— ஆளவந்தான்-ஆளவந்தானென்னுநாமத்தோடும் — வீரையின் - வீரையென்னுநகரத்தில் — மாதவப்பட்டனங்க்சம் - மாதவப்பட்டர்குலத்தில்—அவதாரமாகி - அவதாரஞ்செய்து — மீளவுந்தான்வந்து - திரும்பவுந்தானேவந்து—தமிழ்- தமிழில் — வசிட்டராமாயனமும் - (இந்த) ஞானவாசிஷ்டவமலராமாயனத்தையும்—விளம்பினான் - அருளினார். எ - று. (இ-ம்)

பிரமனேயிருந்த காருண்ணியத்தினா லிப்பூமியின்கண்ணாளவந்தானென்னுமாசிரியராகவவதரித் திந்நூலைத்திராவிடபாஷையிலருளிச்செய்தனனென்பதாம்.



## வெண்பா.

வாசிட்டமென்றளவில் வாழ்வுதரும்வாசித்தா.................................. *
னேசித்ததெல்லா நிரம்புமே (யோசித்து)................................... *
அர்த்தமுணரி லருட்படு மங்கன்னிலையிற்.................................. *
சித்தநிற்கின் முத்தியுமாந் தேர்............................................ *

## ஞானவாசிட்ட - மூலமு முரையு

